REGD. No. M. [illegible]

# ஆனந்த போதினி

# ANANDA BODHINI

Vol. 29. பொருளடக்கம் [illegible]

சுபானு௵ ஆவணி௴ [illegible]

உள்ளடக்கம் பக்கம்

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

## திரு. வி. க. மணிவிழா மலர்

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.

தொகுதி 29 | ஸுபானு ஹு ஆவணி மீ கஉ | பகுதி 2
1943 ஹு ஆகஸ்டு மீ 17௳

### கடவுள் வணக்கம்.

இருளிலே கிடந்த என்றனுக் கிரங்கி
ஈந்தனை உலகமும் உடலும்;
அருளிலே பெற்ற நன்றியை மறந்தேன்;
அகந்தையால் எனதெனக் கொண்டேன்;
மருளிலே வீழ்ந்தேன்; மறவினை புரிந்தேன்;
மாயனே! பிழைபொறுத் தாளாய்;
தெருளிலே இனிக்குந் தெள்ளிய அமுதே!
தெய்வமே! அரங்கநா யகனே! (1)

எங்கிருந்தேன் இங்குவந்தேன் எப்படியென் றுய்ந்தேன்
இவ்வுடலும் இவ்வுலகும் எவ்வழியென் றோர்ந்தேன்
சங்கைதெளி யாதயர்ந்தேன் சாத்திரங்கள் பார்த்தேன்
சாதனங்கள் செய்துழன்றேன் சற்றுமொளிர் வில்லை
பொங்கிவழி காவிரியில் புகுந்துகுடைந் தெழுந்தேன்
பூவிரிந்த பொழிற்பசுமை புலன்கவர ஆழி
சங்குடையாய்! நின்னருளால் சார்ந்தகதை தெளிந்தேன்
சந்நிதியில் வந்தடைந்தேன் தமிழரங்க மணியே. (2)

பண்டைநாள் நிகழ்ந்த பாரதப் போரே
பாவியேன் மனத்தினில் நிகழக்
கண்டவா றென்னே! கண்ண! நின் கீதை
காதிலே கேட்டவா றென்னே!
தொண்டனேன் நெஞ்சிற் றுணையடி கிளந்து
தோன்றுமா றுளதுகொல் அறியேன்
அண்டனே! அல்லிக் கேணியி லமர்ந்த
ஆதியே சோதிநா யகனே. (3)

—திரு. வி. க.




# தமிழர் திருநாள்

[illegible] வருஷம் ஒரு சுப வருஷம். அதில் வரும் ஆவணி [illegible] மாதம் அருமையான மாதம். இந்த ஆவணிமாதம் [illegible]தாம் நாள் ஒரு சிறந்த நாள்; தமிழர் திருநாள்; தமிழன்னை மகிழ்ச்சி பொங்கும் நாள் ஆகும். ஏன்? அன்றுதான் தமிழ் நாட்டின் அருந்தவப் புதல்வர்—தமிழ்த்தாயின் தலைசிறந்த மைந்தர்—திரு. வி. கலியாணசுந்தரர் அறுபது ஆண்டுகள் நிறைவுறும் நாள்; மணி விழா கொண்டாடப் பெறும் நாள். அம் மணி விழா நாளை, தமிழர்களாகிய நாம் அனைவருங் கொண்டாட வேண்டும்.

திரு. வி. க. தாம் கற்றது, கேட்டது அனைத்தையும் தம் சகோதர மக்களுக்கே வழங்கி வந்திருக்கிறார். தமது முயற்சி, உழைப்பு எல்லாவற்றையும் தமிழர் சமுதாய நலனுக்கே பயன் படுத்தினார். அதிகம் சொல்வானேன்! அவர் தம் வாழ்வையே தமிழ் மக்களுக்கு உரிமை யாக்கினார். தம் வாழ்நாள் முழுதையும் தமிழ் நாட்டுச் சேவைக்கே அர்ப்பணித்து விட்டார்.

திரு. வி. க. வின் தன்னலமற்ற அரும் பெருஞ்சேவையால், மக்கள் நலன் பெற்றார்கள். அவரது அறிவுரைகளால் மக்கள் அறிவு விளக்கம் பெற்றார்கள் தமிழ்மொழி வளர்ச்சி யுற்றது. சமய தத்துவ உணர்வு பரவியது. சமூகங்கள் சீர்திருத்தம் பெற்றன. நாட்டில் உரிமை யுணர்ச்சி எழுச்சி பெற்று வீறு கொண்டு விளங்குகிறது. தமிழ்ப்பத்திரிகை உலகம் ஒழுங்கான ஒரு உருவைப் பெற்றது. தொழிலாளர்கள் கண் விழித்தனர்.

திரு. வி. க. தமிழ்மக்களைத் 'தமிழ்ச்சோலை'யில் உற்சாகமாக உலாவ விட்டார், 'தமிழ்த் தென்றலி'ன் இனிமையில் உடல்புளக முற வைத்தார். மனித வாழ்க்கை தற்காலத்தில் எவ்விதமாக இருக்கவேண்டும் என்பதற்கு காந்தியடிகளின் வாழ்க்கைத் தத்துவங்களை முன்மாதிரியாகக் காட்டினார். 'இமயமலை'யின் வானளாவிய சிகரத்தைச் சுட்டிக்காட்டி, மக்களின் வாழ்க்கை லட்சியமும் இவ்வளவு உயர்ந்ததாக இருக்கவேண்டும் என்று

சொல்லாமல் சொன்னார். ஆணுக்குப் பெண் அடிமை என்று பிதற்றி ஆணவங் கொண்டவரையும் ஆணுக்கும் 'பெண்ணின் பெருமை'யைத் தெரிவித்தார். தமிழர் தெய்வம் மாறு இளமையும் அழகும் வாய்ந்த முருகனே என்று, 'முருகன் அல்லது அழகு' என்ற நூலில் அறுதியிட்டுக் கூறினார். சைவ சமயிகளுக்கு, சைவசமயத்தின் விழுப்பொருளைக் கண்டெடுக்க, திருவுருவைச் செய்து கொடுத்தார். குறுகிய மனோபாவமுள்ள சமயவாதிகளுக்குச் 'சைவத்தின் சமரசத்'தைப் போதித்தார். "தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவன்" என்று போற்றி முழக்கினார். நம்மாழ்வார் பெருமையை விளக்குமுறையில் வைணவ சமயத்தின் சிறப்பை விகசிதப் படுத்தினார். பௌத்தத்தின் உயர் கொள்கையையும், சமணத்தின் பழைமையையும், கிறிஸ்துவின் மலைப் பொழிவையும், முகம்மது நபியின் சாந்தி மதத்தையும் தமிழர்கள் அறியச் செய்தார். சகல சமயங்களும் மக்களுக்குப் போதிக்கும் உண்மை 'சமரச சன்மார்க்கமே' என்று மலைமிசை விளக்கென விளக்கினார்.

இவ்விதம் இப்பரந்த உலகில் தமிழ் மக்கள் தேசிய விழிப்பு பெற்று சுதந்திர உணர்ச்சியோடு வாழ்க்கையின் பல துறைகளிலும் உயர் வடைந்து இக பர நன்மைகளைப் பெற வேண்டுமென்று, ஒல்லும் வகையால் எல்லாம் ஓயாது பாடுபட்டு உழைத்து வரும் திரு. வி. க. வுக்கு நாம் செய்யும் நன்றி என்ன? அப்பெரியாரைக் கௌரவிப்பதே யாகும். உலக மக்களிடையே தமிழ்நாட்டின் கௌரவத்தையும், தகுதியையும் உயர்த்தியவர்களில் திரு. வி. க. முதன்மையானவர். ஆகவே, அவரைக் கௌரவித்தால் தான், தமிழர்களாகிய நாம பிற மக்களால் கௌரவிக்கப் பெறுவோம்.

தமிழர்களின் தனிப்பெருந் தலைவரான திரு. வி. க. மணிவிழாவை வருகிற ஆவணி மாதம் ஒன்பதாம் நாளில் தமிழ் நாடு எங்கணும் கொண்டாட வேண்டும். தமிழ் நாட்டிலுள்ள சைவர், வைணவர், சமணர், பௌத்தர், இஸ்லாமியர், கிறித்துவர் அனைவரும்—தமிழ்மொழியைத் தாய்மொழியாக வுடைய அனைவரும் இவ் விழாவில் கலந்துகொள்ள வேண்டும். திரு. வி. க. மணிவிழா நாள் தமிழர் திருநாள் ஆதமாதலால், தமிழ்நாட்டில் மட்டுமல்லாமல், தமிழ் வழங்கும் பிற நாடுகளிலுள்ள தமிழ் மக்களும் இம் மணிவிழாவைக் கொண்டாட வேண்டும். திரு. வி. க. பெயரால் தமிழ்க் கழகங்கள், சமய சபைகள், நூல் நிலையங்கள் முதலியன ஆங்காங்கு ஏற்படுத்த வேண்டும். திரு. வி. க. வின் உயர் கொள்கைகளைப் பின்பற்றி நடப்பதாக உறுதி பூணவேண்டும். மணிவிழா நாளில் திரு.வி. க. நாமம் நாடெங்கும் ஒலிக்குமாக!

# இயற்கைத் 'திரு'வினர்

(குரு.)

ஆர்வம் அன்புடன் ஈர்த்துச் சென்றிட்
ஊக்கம் உள்ளெழுந் துய்த்திடல் செய்ய
முந்துறும் வேட்கை வந்திடப் பின்னிருந்
தேகுவர் யாரென வினவுதி, பேதாய்!
**இயற்கைத் 'திரு'வினன்** இயற்கை நெறியினன் (5)
செயற்கை வேண்டாச் சீரிய கொள்கையன்
வண்டமிழ் உரைநடை வளம்பெற வந்தோன்
பெண்டிர்தம் உரிமை பேணிட வந்தோன்
தும்பை சூடித் தூசிப் படையிருந்
துரிமைப் போரில் உரமிட வந்தோன் (10)
உரிமை வேட்கை ஊட்டிட வந்தோன்
சிறியோர் தம்மைத் திருத்திட வந்தோன்
பெரியோர் தம்மைப் பேணிட வந்தோன்
வெறுப்பைப் போக்கி விருப்பே பெருக்கி
ஒறுத்தல் ஒழிக்கும் ஒருபெருங் கோளாம் (15)
அஹிம்சை தனக்கோர் அணிதர வந்தோன்
அன்பெனும் மேகம் அமைவுறத் தவழ்ந்து
உள்ளத் துணர்ச்சியாம் ஓங்கல் படர்ந்து
செஞ்சொல் வளமிகு சொற்பொழிவு செய்து
உணர்ச்சி வெள்ளம் நிரப்பிட வந்தோன் (20)
குற்றம் கூறும் கொடுமை அறியான்
சிற்றம் என்பதைச் சிறிதும் அறியான்
நல்லவே கண்டும் நன்மையே புகழ்ந்தும்
எங்கும் நலமே என்றும் கண்டும்
'அறங்கூறு னல்ல செயினும் ஒருவன் (25)
புறங்கூறு னென்ற சொல்லினி தென்ற
வள்ளுவர் வாய்மொழி வளம்பெற வந்தோன்
அன்பு வழிப்பட் டறிவைத் துணைகாணும்
இன்ப இயற்கை இயைந்திட வந்தோன்
இளைஞர் தம்மை ஈர்த்துத் தன்பால் (30)
சளையா தவருடன் சமமாய்ப் பேசி
நாட்டின் தொண்டுக் கமைத்திட வந்தோன்
பொதுமை வேட்கை பொதுளிய நோக்கால்
பூசல் குழப்பம் போக்கிட வந்தோன்
இன்ன மாட்சி இனையன் ஆகி (35)
தன்னிக ரில்லாத் தகைமையும் சால்பும்
கொண்டவன் **மணிவிழாக்** கண்டிடற் காகச்
சிந்தையம் பதிக்கே செல்கின் றனர்காண்.
**மணமும் அழகும் இணைந்த வாழ்வின்**
**பெரியோன்** மணிவிழாக் கண்டிட (40)
வருதி நீ என்னுடன் வணங்கியும் வரற்கே.



# யான் காணும் கலியாணசுந்தரர்

(நாவலர்-பண்டித-ந. மு. வேங்கடசாமி நாட்டார்)



திருவாளர் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் அரசியல், தொழிலியக்கம், கல்வி நிலை, சமய நெறி முதலிய பல நிலைகளில் நின்று பணியாற்றி வந்தோர் - ஆற்றி வருவோர். ஆகலின் தமிழ் நாட்டிலே மலை விளக்கெனத் திகழும் மாண்புடையோர்; தமிழ் நாட்டின் புறத்திலும் பலரால் நன்கறியப் பெற்றவர். அவர் தம் கல்வியறிவையும், சமய வுணர்வையும் மக்கட்கு எவ்வாறு பயன்படுத்தி வந்தனர்? அவருடைய குண நலங்கள் யாவை? என்பவற்றிற்கு விடையாக, யான் அறிந்தவற்றைச் சுருங்க வுரைத்தலே இக் கட்டுரையின் நோக்கமாம். அவரது கல்வி என்னுங்கால் தமிழ்க் கல்வியே என்று கருதப்படுவது. அவர் புகழ்பெற்ற நல்லாசிரியர்பால் தமிழ் பயின்றுளார் என்பதும், தாமும் தமிழாசிரியராகப் பணியாற்றி யுள்ளாரென்பதும், பல சிறந்த தமிழ் நூல்கட்குக் குறிப்புரை முதலியன எழுதியுள்ளார் என்பதும் பலர் அறிந்தனவே. ஆயின், அவையெல்லாம் அவர் பெருமைக்குத் தோற்றுவாய் மாத்திரையேயாகும். அவர் வரைந்த கட்டுரைகளும், பேசிய சொற்பொழிவுகளுமே தமிழுக்கு ஆக்கந் தந்து, அவருக்குப் பெரு மதிப்பை விளைப்பனவாயின.

அவர் முதற்கண் "தேசபக்தன்" ஆசிரியரா யமர்ந்தும், பின்னர் "நவசக்தி"யைத் தோற்றுவித்து நடத்தியும் போந்தனர். அவற்றிடையே பல்வேறு பொருள் பற்றியும் அவர் வரைந்த விருப்பமுடைய கட்டுரைகள் உலப்பில்லன. "பத்திரிகைத் தமிழ்" எனக் கூறப்படுவதோர் இழுக்கு நீங்கிச் செய்தித் தாள்களும் சீரிய நடையுடன் உலா வருமாறு செய்த பெருமை முதலியாரவர்கட்கே உரியது. மற்றும், பேசுவதிலும், எழுதுவதிலும் உரைநடை ஒத்தியங்குவது அவரிடைக் காணப்படும் சிறப்பியல்பு. அவரது உரை நடை தடைபடாது செல்லும் இயல்பினது! விழுமிய இலக்கியச் சொற்களை இடையிடை கொண்டு திகழ்வது; பொருளை வற்புறுக்கும் ஆற்றலமைந்த அடுக்குகள் முதலியவற்றாற் பொலிவது. இவ்வாற்றால் அவரெழுதுவது கற்போரையும், பேசுவது கேட்போரையும் பிணித்து உள்ளக் கிளர்ச்சியை விளைத்து மேலும் மேலும் முறையே அவற்றைக் கற்கவும் கேட்கவும் தூண்டா நிற்கும். தமிழ் நாட்டிலே கல்லூரிகளிற் பயில்வோரும் ஏனோருமாகிய எத்தனையோ இளைஞர்கள் நம் திரு. வி. க. அவர்களுடைய உரை நடையை விரும்பிப் பயின்று

அதனுனே, தமிழ் கற்பதன்கண் விஞ்[illegible] [illegible]வமுறை [illegible] னர். இளைஞருலகிலே முதலியாரவர்களுடைய [illegible]கலவாக்கு [illegible] வின்றிப் பெருகியது. அதற்குக் காரணம் அவரது பேசுந்திற னும், எழுதுந்திறனும் மட்டுமல்ல; அவருடைய எளிமை, இன் குணம், உளத்தூய்மை முதலியனவுமாகும். அவர் ஓர் அவை யின்கண் பேசத் தொடங்கும் பொழுது உள்ளக் கிளர்ச்சியுடனும், புன்முறுவலுடனும் காட்சி யளிப்பர். அவர் முகத்திலே சோர்வோ, வருத்தமோ எப்பொழுதும் காணப்படுவதில்லை. கேட் போர் தம்மையும் பொழுதையும் மறந்து அச் சொற்களிலே ஈடு பட்டு விடுவர்.

அவரது உள்ளம் துறவியுள்ள மாகும்; அன்றிக் குழவியுள்ள மெனலுமாம். அழுக்காறு, அவா, வெகுளி, இன்னச்சொல் முத லிய தீமைகள் அவருக்குப் புறம்பாவன. ஆயின், அவர் யாவர் மாட்டும் அன்புடையவர்; மகளிர்பால் மதிப்பு மிக்கவர்; இயற் கையோ டியைந்த வாழ்வை என்ஞான்றும் பாராட்டுபவர். இவை யெல்லாம் அவருடைய சமய வாழ்க்கையில் அவர்பால் முதன்மை யுற்றிருந்தது, எல்லாச் சமயங்களிலும் பொதுமை காண்டல் என்பதாகும். அவரது சமயம் சைவமே யாயினும் அவருக்கு முற்றோன்றலாகிய திரு. வி. உலகநாத முதலியா ரவர்களைப் போன்று பேசுவது எழுதுவது உள்ளிட்ட யாவற்றிலும் எட்டுணை யும் விலகாது செல்லும் நீரரல்லர். ஒரோவழி முன் பின் முரண் பாடு தோன்றலுங் கூடும். அவை யெல்லாம் அவர் மேற்கொண்ட தொண்டு நெறிகள் பல வாதலானும், பல திறத்தினரோடு பயிற லானும் நிகழ்வனவே யாகலின், அவரது பெருமைக்கு அரணகர் திருத்தலில்லை.

பற்பல ஆண்டுகளாகப் பலதுறைகளிலும் பணி புரிந்து, சிறப்பாகத் தமிழ்நா டெங்கணுமுள்ள தமிழ்ச் சங்கங்களிலும், சைவ சபைகளிலும், பிற கழகங்களிலும் தலைமை தாங்கியும் சொற்பொழிவுகள் செய்தும் இடையருது தமிழ்ப்பணி புரிந்து தமிழை வளம் படுத்திய அன்பர் திரு. வி. கலியாணசுந்தரனர் அறுபதாம் ஆட்டை நிறைவைப் பெற்று மணி விழாக் கொள் ளும் பேறு கண்டு தமிழ் மக்கள் அனைவரும் அகங் களி துளும்பு வர். யானும் அங்ஙனம் களி கூர்வதுடன் அவர் மேலும் பல் லாண்டு பல்லாண்டு வாழ்ந்து பணி புரிய அருள் சுரக்குமாறு 'முருகன் குமரன் முனி நம் குரு' ஆகிய வள்ளி மணாளன் மலரடி களை வணங்கி வாழ்த்து கின்றேன்.

---

## இயற்கைத் 'திரு'வினர்

பொன்னிநதி யென்னப் பொதிகை வரையென்ன  
என்னகத்தின் ஆசைப் பெருக்கென்னத்—தன்னிகரர்ப்  
காந்தி புகழென்னக் கற்றோர்தம் நோக்கென்ன  
ஏந்தல் நிலைக்க இனிது.

# உள்ளொளி யுடைய ஒவ்வியார்

[ராவ்சாகிப் திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.]

நமது தாய்த்திரு நாட்டுக்கும் தமிழன்னைக்கும் பெருந் தொண்டாற்றி வரும் திரு. வி. கலியாணசுந்தரனாரை அறியாதார் இலர். இவர் மக்களை அவர்கள் கொண்ட குறிக் கோளிலே சென்றெய்துமாறு முன்னின்று நடத்தவல்ல தலைமக் கட்குரிய பண்புகள் பலவும் இயல்பாகவே வாய்க்கப்பெற்றவர்; உள்ளொளி யுடையவர்; பரந்த நோக்கமுடையவர்; அறிவு சான்ற வர்; உறுதி படைத்தவர்; ஆற்றல்,மிக்கவர்; அன்பு நிறைந்தவர். இவற்றோடு கல்வியிற் சிறந்தவர்; சொல்வன்மை படைத்தவர். இன்னோரன்ன இயல்புகளை யுடையவரன்றோ தாய்த்திரு நாட்டுக் குத் தொண்டுபுரியத் தக்கவர்.

தாய்த்திரு நாட்டுத் தொண்டு தமிழ்த் தொண்டினை அடிப் படையாக் கொண்டதாகல் வேண்டுமென்பது கலியாணசுந்தர னார் கருத்து. இருவகைத் தொண்டுகளுக்கும் நெருங்கிய பிணைப்பு உண்டு; ஒன்றை ஒன்று தழுவியது. ஒன்றற்கு மற்றொன்று இன்றியமையாதது. தாய் மொழிப் பற்றின்றித் தாய்நாட்டுப் பற்று இல்லையாம். அங்கனமே தாய் நாட்டுப் பற்றின்றித் தாய் மொழிப் பற்றும் இல்லையாம். இருவகைப் பற்றும் இல்லாதவர் மக்கட் பிறப்பில் வைத்து எண்ணத்தகாதவர். இறைவனுலகில் அவ்வாறமைந்த மக்கள் ஒருவரேனும் உளராயின் அந்நாடு நாடன்று; சுடுகாடேயாம். இவ்வுண்மையை இளமையில் தாமே நன்குணர்ந்தவர் கலியாணசுந்தரனார். இவர் தாய்மொழிப் பற்றில் தேசப் பற்றையும் தேசப்பற்றில் தாய்மொழிப் பற்றையும் விதைத்துச் செழிக்கச் செய்து வருபவராவர்.

தாய்மொழி புராண வாயிற்பட்டு மீட்சியில்லாத நெறியை அடைந்திருந்தது. அதனைத் தமது அறிவுரங்கொண்டு வலிதின் வாங்கி அதற்குத் தேசப்பற்று என்னும் உயிராற்றலைக் கலியாண சுந்தரனார் உதவினர். இப்புதிய ஆற்றலால் தமிழ்மொழி புத் துயிர் பெற்று இளமை வேகத்துடன் தமிழ் நாட்டில் பரவத் தொடங்கி விட்டது. உயிருள்ள, வேகமுள்ள, ஆற்றலுள்ள புதிய தமிழ் இவர் எழுதியுள்ள அழகிய நூல்களிலே மிளிர்ந்து பாய் கின்றது. என்றும் அழியாத இளமைத் தெய்வம் திருநடஞ் செய்கின்ற பூங்கோயிலாக நமது தமிழ்த் திருநாடு விளங்க வேண்டு மென்ற கொள்கை இவரது உள்ளத்திலே குடிபுகுந்தது. "வீரியர் வீரம் விழுங்கி நின்ற" வேலவனாகிய தமிழ்த்தெய்வத்தின் சிறப்பு இவரிடத்தே ஒரு புத்துணர்ச்சியைத் தோற்றுவித்தது. 'முரு கன் அல்லது அழகு' என்னும் நூல் இப்புத்துணர்ச்சியின் விளைவே யாகும். தமிழ்த் தெய்வத்திற்கேற்ற தமிழ். தமிழ்த் தெய்வம் வேணவாவினால் உண்டு பூரிக்கும் தமிழமிர்து. அத் தெய்வம் விரும்பித் திளைத்தாடும் தமிழ்த் திருநதி. அத்தெய்வம் வெற்றிக் கோலத்துடன் பொலிந்து விளங்கும் தமிழ்ப் போர்க் களன்.

வீரம் காதலின்றிச் சிறவாது. காதலும் அழகும் கலந்தே தோற்றமளிப்பன. இரண்டற்கும் நிலைக்களனு யுள்ளார் பெண் மணிகளே. தாய் நாட்டின் வாழ்வு அவர்கள் வாழ்வு; தாய் நாட்டின் தாழ்வு அவர்கள் தாழ்வு. மக்கட் பண்பு அவர்களாலே உளதாவது; அவர்களாலே இலதாவது. அவர்கள் கல்வியை நாம் வெகு காலமாகப் புறக்கணித்து விட்டோம். அவர்கள் மேம்பாட்டைக் கனவினும் கருதினேமில்லை. அவர்களை விலங்குகளோடொப்பக் கருதி வந்தோம். வீரமக்கள் தமிழ் நாட்டில் தோன்றுவதற்கு இடனில்லாது செய்து விட்டோம். இக்குறைபாடு கலியாணசுந்தரனாரது மனத்தை ஈர்ந்து வந்தது. அவரது உயிராற்றலைத் தேய்த்துக் குறைத்து வந்தது. இனிப் பொறுத்தல் அரிதாயிற்று. உள்ளம் உடைந்து உணர்ச்சி பெருக்கெடுத்துத் தமிழுலகிற் பரந்து பாய்ந்தது. 'பெண்ணின் பெருமை'யை உணரலாயினேம். இந்நூல் அழகு வாய்ந்தது; இன்பம் பயப்பது; நீண்ட காலமாய் வருந்திய பிணிக்கு அருமருந்தன்னது.

இந்நூல்களெல்லாம் பரந்த நோக்கத்துடன் இயற்றப்பட்டன; தமிழ்நாடு உய்தி பெறுதற்குரிய உபாயத்தையே தெளிவிப்பன. உலகம் தான் சென்றுகொண்டிருக்கும் பாழ்நெறியினின்று விலக வேண்டும். அழிவையே எண்ணி ஆக்கத்தை மாய்க்கும் பொல்லா நெறியைத் தூர்த்துவிட வேண்டும். உலகம் உய்திபெற வேண்டும். இன்ப வெள்ளத்தில் திளைக்க வேண்டும். 'தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்', என்ற தெய்வப் புலவர் திருநெறியை மக்கள் மேற்கொள்ள வேண்டும். இப்பொது நோக்கங்களே திரு. முதலியாரை ஊக்கி வந்தன. இவை பற்றித் தோன்றிய கருத்துக்கள் 'பொதுமை வேட்டல்' என்ற செய்யுள் நூல் வடிவாக வெளிவந்தன. உலகம் நீதி நெறியிலே நிலைபெற்றிருக்க வேண்டும் என்ற ஆராப்பெருங் காதல்,

> பன்மார்க்க அடியாகிப்
> பண்புவளர் சன்மார்க்கம்
> உன்மார்க்கம் ஒரு மார்க்கம்
> உயர்மார்க்கம் வேறில்லை
> தொன்மார்க்கம் என்னுளத்தில்
> துலங்க வைத்த மெய்ப்பொருளே!
> துன்மார்க்கஞ் சாய இங்குத்
> துணைசெய்ய அருள்மொழியே. (பக்-32)

எத்தனை அழகாக, எத்தனை உறுதியாகப் புலப்படுகின்றது.

பெரு நோக்கங்கள், பக்குவம் எய்திய மனத்தின் கண்ணேயே தோன்றுவன. வெகுகாலமாக, இளமை தொட்டு, திரு. முதலியார் தமமைப் பக்குவப்படுத்தி வளர்த்திருக்கின்றனர். இறந்தும் இறவாது, முன்னையினும் பன்மடங்கு உயிராற்றலோடு, விரைந்து தொழிற்பட்டு வாழும் மனத்தைப் பெறவேண்டும் கல்வியைக் கற்றவர். இக்கல்வி கலாசாலைகளிற் போதிக்கப் படுவதன்று; கழகங்களில் விளைவதன்று; இடைவிடாத மனப்பயிற்சியால்

# பெண்மை வேண்டும் பெருந்தகை

[ஸ்ரீமதி ஈ. த. இராஜேஸ்வரி, M. A., L. T.]

ஔவையார் பிறந்த நாடு; கண்ணகி பிறந்த நாடு; காரைக்காலம் மையாரும் ஆண்டாளும் உலகுக்குக் கண்ணைத் திறந்து கடவுளைக் காட்ட வேண்டுமென்றே பிறந்த நாடு; திலகவதியாரும் மங்கை யர்க்கரசியாரும் ஆண்மக்களையும் நாட்டையுமே திருத்தி வழிப்படுத்தி ஆட்கொண்ட நாடு. இப்படிப்பட்ட நாட்டில் இத்தகைய வான் புகழிலே ஈடுபட்ட மனமுடையவர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் ஆவர். ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னே இவர் பத்து வயது பிள்ளையாக இருக்கை யில் என்ன கண்டார்? எங்குப் பார்த்தாலும் எழுதப் படிக்கத் தெரியாத பெண்கள், பெற்றோராலும், கணவன்மாராலும், மைந்தராலும் பண்ட மாற்றுப் பொருள் போலக் கருதப்பட்டவர்களைக் கண்டார். "பிசாசும் வேதத்தைக் கையாளும்" என்னும் பழமொழிக்கு ஏற்பத் தேவார திருவாச கங்களும் பிரபந்தங்களும் பெண்களுடன் வாழ்தலால் துன்பமே என்று கூறுகின்றன என எடுத்துக்காட்ட முன்வந்தனர்.

சீதை பிறந்த இந்த நாட்டிலே பெண்கள் எல்லாவற்றையும் தம் கண வருக்கும் பிள்ளைகளுக்கும் கொடுத்துவிட்டுப் பட்டினி கிடப்பதே பேரின்பம் எனக் கருதியது வியப்பன்று. அன்பால் நிகழும் அச்செயல் என்றும் நிகழ வேண்டும் என அச்சமூட்டி ஆடவர்கள் வற்புறுத்தினார்கள். பெண் களுக்கு என ஓர் உரிமையும் இல்லை என ஓட்டாண்டியாகப் பலரையும் ஓட்டினர். அதற்கேற்ப ஆண்மகன் அமைத்த சட்டத்தில் பெண்ணின் உரிமையும் குறுகிய எல்லையில் அடைபட்டுக் கிடந்தது. நிலைகுலைந்து ஆதர வற்ற பெண்கள் எத்தனையோ பேர் இன்னும் இந்த நாட்டில் அலைகின்றதை நாம் காணவில்லையா? துறவு பேசியவர்கள் எல்லாம் பெண் பிறவியின் இழிவையே எடுத்துரைத்தார்கள். இத்தனை இக்கட்டுக்குள்ளே பெண்கள் "பெண்ணைப் பிறப்பதிலும் பேயாய்ப் பிறப்பது மேல்" என்று எண்ண மிடத் தொடங்கினர். தம் நம்பிக்கையை இழப்பதல்லவா அழிவின் முடி வெல்லை!

திரு. வி. க. அவர்கள் இந்த நிலையைக் கண்டார்; அன்புடைய தாயா ரின் வயிற்றிற் பிறந்தவர்; (சில ஆண்டுகளுக்கு முன்னே), அந்த அம்மை யார் மறையும்வரை சீராட்டிப் பாராட்டி வளர்க்கச் சிறு குழவிபோல் வளர்ந்து தாய்மை அன்பிலே திளைத்தவர்; திரு. உலகநாதரையே தமைய னாகப் பெற்றவர்: அன்புடைய சகோதரிகளோடு ஒன்றாக வாழ்பவர்; தம்மை உயிரெனக் கருதிய மனைவியோடு இல்லறம் நடத்தியவர். குழந்தை களிடத்தே குழைந்த மனமுடையவர்.

---

விளைந்து செழிப்பதாகும். மிக நீண்ட காலம் இப்பயிற்சியில் நிலை நின்றார்க்குப் பொருள்களின் உண்மைத் தன்மை விளங்குவதாகும். உள்ளொளி தோன்றி அறிவு, சொல், செயல் என்ற மூன்றனையும் விளக்முறச் செய்து அமைதியையும் இன்பத்தையும் கொடுக்கும். இவ்வுள்ளொளியே வாழ்க்கை நெறியிற் செலுத்துவதுமாகும். இவ்வுள்ளொளியால் தோன்றி வெளிவரும் சொற்கள் உண்மை யுடையனவாய், பயனுடையனவாய், கேட்போர் கற்போர் மனத் தில் ஒளிபிறங்கச் செய்வனவாய் அமையும், இத்தகைய ஒளியோடு கூடிய செஞ்சொற் புலவர் திரு. கலியாணசுந்தரனார். இவர் மனத்தினின்றும் தோன்றி வெளியே பரவிச் செல்லும் இவ்வுள் ளொளி அனைவரும் உய்தி பெறுவதற்கு நெறி காட்டுவதாக.

திரு. வி. க. இயற்கையிலே இளகிய மனமுடையவர். தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராம் பெருமையும் இவரிடம் உண்டு. பெண்களின் தாழ்ந்த நிலைமையைக் கண்ட இவர் மனம் சாந்தி அடையவில்லை. அவர்களை உயர்த்துவதற்கே உழைக்க வேண்டும் என்று காப்புக் கட்டிக் கொண்டார்: பலராலும் போற்றப்படும் திருக்குறளை எடுத்தார். திருவள்ளுவர் பெண்ணை எவ்வாறு மதித்தார் என்பதை உலகம் அறிய "பெண்ணின் பெருமை" என்ற நூலை எழுதி எம்மனோருக்கு உதவினார். இந்த நூல் தமிழ் நாட்டிலே ஒரு புத்துணர்ச்சியை உண்டாக்கி விட்டது என்பது மிகையாகாது. எளிய நடையிலே, தெளிவாகக் கூறப்பட்ட அவ்வாழ்ந்த கருத்துக்கள் படித்தவர்கள் மனதில் பசுமரத்தாணிபோல் பதியலாயின. இது மாத்திரமல்ல. அவர் பெண்ணின் பெருமையை வற்புறுத்தாமல் பேசுவதே இல்லை. பெண்களுக்கு வீடுபேறில்லை என்றார்க்கு ஆண்மகன் பெண்ணாக மாறினாலன்றி அவனுக்கு வீடுபேறில்லை என்று சொல்லலாயினர். இவர் வணங்கும் கடவுளும் பெண்ணோடு விளங்கும் பெருமானே. இயற்கையைப் புகழ்வதும் பெண் வடிவம் கொண்ட தாயாய் இருப்பதாலேயே. நாட்டுரிமை கேட்பது இவருடைய பெண் தொண்டேயாம். பொய்த்துறவை ஓட்டி, உண்மையான காதல் வாழ்வை-கடவுள் வாழ்வை-நிலைநாட்ட இவர் பட்டபாடு சிறிதல்ல. இத்தகைய காதல் திருமணங்கள் பல்கவேண்டும்; உலகமெங்கும் பார்வதி பரமேசுவரராயும், இலக்ஷ்மி நாராயணராயும், வள்ளி முருகனாகவும் தாம் கண்ணாரக் காணல்வேண்டும் என்னும் ஆசையாலே தாமே புரோகிதராகி மூலைமுடுக்குகளிலும் கஷ்டம் பாராது சென்று இத்திருமணங்களை நடத்தி வைக்கிறார். ஆனால் முறையற்ற காமத்தை வளர்ப்பவர் இவர் அல்லர்.

30-35 வயது கடந்ததும் கணவனும் மனைவியும் வீட்டிலேயே இருந்து கொண்டு துறவிகளாகிப் பொதுத்தொண்டு செய்தல் வேண்டும் என வற்புறுத்தி வருகின்றார். இன்னும் இத்தகைய தொண்டு செய்யத் தாயுமானவர் போல் "மறமலி உலக வாழ்க்கையே வேண்டும்", "வைகுண்டம் வேண்டாம்; மோக்ஷம் வேண்டாம்", "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற கருத்துடையராய்ப் பிறவி வேண்டும என்கிறார்.

இத்தொண்டிற்கெனவே இவர் பிறப்பெடுத்தார் எனலாம். இத்தொண்டும் வெற்றி பெற்றுள்ளது. அரசியற்றுறை, கல்வித்துறை, வாழ்க்கைத் துறை என்ற பல்வகையான துறைகளிலும் முன்னுக்கு வந்து இவரை வாயார வாழ்த்தும் பெண்களுக்குக் கணக்கேயில்லை. பெண்களின் முற்னேற்றதைக் காண்பதிலே இவருக்குப் பேராசை. பெண்களுக்கு இவர் பேசுவதைக் கேட்பதில் பெருவிருப்பம் உண்டு. இவர் தலைமையிலே பேசத் தாயெதிரே பேசும் குழவிகளைப் போலப் பெண்கள் முந்தி வருவதை இன்றும் காணலாம். "பெண்களே தலைமை பூண்டு பெருஞ் செயல் செய்து தாய்மையை வளர்க்காரா? பெண்களுக்கென்றே ஒரு பல்கலைக்கழகம் கலைக்கோயிலாக எழாதா? பெண்கள் ஆட்சியில் அரக்க வாழ்வு ஒழிந்து அன்புவாழ்வு எங்கும் ஒளிருமல்லவா?" என்றெல்லாம் இவர் கனக் கண்டு வருகிறார். இவர் எண்ணங்களின் சக்தி வீணாகாது என்பது திண்ணம். இவர் தம்மைப் பெண்ணெனக் கருதிக் கொள்வதிலே பெருமகிழ்ச்சி கொள்பவர். பெண்களாகப் பிறந்து அப்பிறவித் துன்பக்கடலில் அலைப்புண்டு வரும் நாங்களும் பெண் பிறவி வேண்டாம் என்று சொல்லும்போது, இப்பெருமகனாரோ பல பிறவியும் பெண் பிறவியாக வாராவோ என்று வேண்டிக் கொள்ளும் தாய்மை அன்பை என்னென்பது! என்னென்பது! பெண்ணுலகம் இவரை வாயார வாழ்த்துகிறது.

# தமிழ்நாடு கண் திறக்கிறது

(பண்டித—பூ. ஸ்ரீநிவாசன்.)

உயர்ந்தது தாழ்வதும் தாழ்ந்த துயர்வதும், என்றும் ஒரு படித்தா யிராது சுழன்று சுழன்றோடும் வாழ்க்கைச் சகடத்தின் இயல்பு. இஃது எதற்கும் விதிவிலக் களிப்பதில்லை. நந்தாய்நாடு மாத்திரம் இவ்விதிக்கு விலக்காகுமோ?

ஓர் காலத்தே அறிவு, ஆற்றல், கல்வி, செல்வம் இவையிற் றில் காண்போர் அழுக்காறு கொள்ளுமாறு மிக்க உயர்நிலை யுற்றிருந்த இப்பாரதநாடு, இதுபோது அடைந்துள்ள நிலைமை யாது? பெரும் வீழ்ச்சி யுற்றது. பிறர்—சில்லாண்டுகட்கு முன் வரை இழிநிலை யெய்தியிருந்து, அண்மையில் தமது அரும்பெரு முயற்சியால்—இடைவிடா உழைப்பால்—ஒப்புயர்வற்று ஒளிரும் வேறு நாட்டினர்—எள்ளி நகையாடுமாறு தாழ்ச்சி பெற்றது. அதன் செல்வம் சிதைந்தது; வளங்கள் அனைத்தும் வறண்டன; கல்வியின் ஆக்கம் அழிவுற்றது; அறிவியற் கூறுகள் அருகின; கலைகள் நிலைகுலைந்தன; ஒற்றுமை நலிந்தது; வேற்றுமை மலிந்தது; பசியும் பட்டினியும் தாண்டவமாடத் தொடங்கின;

"நாடென்ப நாடா வளத்தன; நாடல்ல
நாட வளந்தரும் நாடு."
"உறுபசியும், ஓவாப் பிணியும், செறுபகையும்
சேரா தியல்வது நாடு."

என்னும் நாட்டி னியல்புக ளனைத்தும் எட்டுச்சுரைக்கா யாயின; அடிமை யுணர்ச்சி மக்கள் உள்ளத்தில் அகற்றற் கியலாவண்ணம் ஆழ வேரூன்றியது.

இவ்வீழ்ச்சிக்குக் காரணம் யாது? பலர் பலவாறு கூறுப. 'வகுப்பு வேற்றுமைகளும் சமயப்பூசல்களுமே' என்பர் ஒரு சாரார். 'பொருளற்ற மூடப்பழக்க வழக்கங்களிலும் சமயச் சடங்குகளிலும் கருத்தூன்றியதே காரணமாம்' என்பர் மற்றொரு சாரார். 'உடல் பொய், உலகம் பொய்' என்னும் வெறுப்பு வேதாந்தம்—போலி வேதாந்தம பரவியதே காரணம்' எனக் கழறுவர் மற்றொரு பகுப் பினர். 'தன்னலப் பெருக்கும் புல்லுருவிகளின் போக்குமே' எனச் சாற்றுவர் பிறிதொரு பிரிவினர். இக்கூற்றுக்கள் அனைத்தினும் உண்மை யுண்டு என்பதும் மறுக்க முடியாததாகும். பொதுக் காரணம் எதுவாயினு மாக. அது பற்றிய ஆராய்ச்சி ஈண்டு வேண்டற் பாலதன்று. எனினும், சிறப்பாகத் தென்னாட்டை-தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் தமிழர் தமிழையும் தமிழறி ஞரையும் போற்றாது ஒழிந்ததே தலையாய காரண மென்பதே எனது கருத்து. பண்டைநூற் பயிற்சி குன்றியமையின், தமிழ் நாட்டின் பண்டைச் சிறப்பையும், தமிழ்ப்பெரு மக்களின்—இரு பாலாரின்—கல்வி, கலைப் பெருக்கு, அறிவு மேம்பாடு, வள் ளன்மை, கற்பின் மாண்பு முதலியவற்றையும் அறியும் அறிவு குன்றியது. 'தன் பெருமை தானறியாத் தத்துவனை'ப் போன்ற னர் தமிழ் மக்கள். அரசியல் மாறுபாடுகளும் இடையில் புகுந்தன.

மொழியியல் தொழிலியல்களோடு அரசியல் சமயவியல் முதலிய பல்வேறு துறைகளினும் தமிழர் பிற்போக்குடையராயினர். மேனாட்டினரின் நடையுடை பாவனைகளாகிய புதிய நாகரிகப் படுகுழியில் கண்ணொளி மழுங்கிப் பட்டனர். பிறமொழிப் பித்தந் தலைக்கேறியது. பெயரளவில் தமிழரென நின்று பிறவாற்ருல் பரதேசிகளாயினர். பாரதத்தாயின் — தமிழன்னையின் — வீழ்ச்சிக்கு வேறென்ன காரணங்கள் வேண்டும்? எனினும், இந்தியத் தாய் திக்கற்றவளாக ஆய்விடவில்லை. தன்னைக் கைதூக்கிவிட வல்ல நன்மக்களை — வீரமக்களை—பெருமலில்லை. தம் தாயின்—அருமைத்தாயின்—இழிதகவை—துயரத்தைக் கண்டு, கவன்று, கண்ணீருகுத்து, 'அன்னையின் துன்பத்தைத் துடைப்பதே—அவட்குப் பணிசெய்து கிடப்பதே—தங்கட'னெனக் கொண்ட அறிவறிந்த பண்புடை மக்கள்—அவள் நோற்ற நோன்பின் பேருகப் பிறந்த பெருமக்கள்—புறஞ்சுவர் கோலஞ் செய்யா மக்கள்—அதற்கெனப் பல்லாற்ருனும் தொண்டாற்றுவா ராயினர்.

தமிழ் நாட்டிற்கும் தமிழன்னைக்குந் தொண்டாற்றத் தொடங்கிய அவர்களுள் சிலர், காலநிலைக் கேற்ப யாப்பிலும் உரையிலும் நூல் பல இயற்றியும் நன் மாணவர்க்குக் கற்பித்தும் வரலாயினர். சமய தத்துவத் துறைகளில் உழைக்க எண்ணியோரிற் சிலர், சமயச் சார்பான பாக்களாலும், தத்துவ ஆராய்ச்சிகளாலும், மெய்யன்பையும், மெய்யுணர்வையும் ஊட்டுவாராயினர். இவ்வாறே, பல்லோர் பல்வேறு துறைகளில் தொண்டாற்ற முயன்றனர். இன்னோரன்ன முயற்சிகள் பலவும், அவ்வக்காலத்தே நற்பயன் நல்கினவேனும், பிற்காலத்தே பயனற்றுப் போகத்தக்க நிலைமையை யெய்தத் தொடங்கலாயின.

அடிப்படையான பொருளாதார நிலை சீர்கேடடைந்துள்ள போது ஏனையவை எங்ஙனம் நிலை பெறும்? அறிவு, அன்பு மெய்யுணர்வுகளின் வளர்ச்சிக்கெனக் கொள்ளப்பட்ட கல்வி முதலியன அந்நோக்கங்களை விட்டு, பொருளாதார நிலைக்கு ஏங்கி வாடத் தொடங்கின. பிறமொழி மாது ஆக்கம் பெற்றுக் கோலோச்சி வருமிடத்துத் தமிழ்த்தாய்க்கு இடமேது? பத்தி நெறியும் முத்தி நெறியும் வயிற்று நெறிக்கு அலைவோர்க்கு எங்ஙனம் பயன் தருவனவாகும்? இவ் வுண்மை யுணர்ந்த வேறு சிலர் தொழிற்றுறையின் சீர்ப்பாடே பொருளாதாரச் சீர்ப்பாட்டிற்குத் தக்க மருந்தாமென்று கொண்டு, அத்துறையில் ஊக்கஞ் செலுத்திவரலாயினர். மற்றுஞ் சிலர் அரசியற்றுறையின் முன்னேற்றம் தொழிலியற்றுறைக் கின்றியமையாத தென்று கருதி, அத்துறையிற் கண்ணுங் கருத்துஞ் செலுத்திப் பணிபுரிவாராயினர்.

பாரதத்தாயையும் தமிழ்த்தாயையும் பண்டுபோல் அரியணையில் அமர்த்திக் காண வேணவாக் கொண்டு அப்பணிக்கெனவே தம்மை யொப்புக் கொடுத்த தமிழ்ப் பெருமக்கள் தனிப்பட்ட வெவ்வேறு துறைகளிற் பேருக்கத்துடன் முயன்று ஆற்றிய உழைப்பால், தமிழ்நாடு அவ்வத்துறைகளில் முன்னேற்றம் எய்தியுள்ள தென்பது மறுக்க முடியாத உண்மை. எனினும், 'எவ்

லாத் துறைகளின் முன்னேற்றமும் வேண்டற்பாலனவே' யென்னும் ஒற்றுமையுணர்ச்சி பெரும்பாலோர் உள்ளத்தில் அரும்பிற்றில்லை. அதற்கு மாறாக வேற்றுமை யுணர்ச்சியே வேற்றுருவங் கொண்டு எழலாயிற்று, 'சமயத்தாற் பயனில்லை; அதனைத் தகர்த்தெரிதல் வேண்டு' மென்னும் கிளர்ச்சி ஓர்பால் தலை தூக்கியது. தமிழன்னைபால் கொண்ட அன்புப் பெருக்கு ஆரியமொழி (வடமொழி)ப் பகைமை யுண்டாக்கத் தொடங்கியது. 'தென்னாடு—வடநாடு', 'தமிழர்—ஆரியர்' என்னும் வேற்றுமைகள் விரிவிட்டெழலாயின.

இவ்வேறு பாடுகளை யகற்றி ஒற்றுமை யுண்டாக்க முயன்றவர்கள் பிற துறையினரால் புறக்கணிக்கப் பட்டனர். சமயப் பற்றுடையோர் பிற துறையினர் கூற்றுக்களை வெறுத்தனர்; செவி சாய்த்திலர். வேறொரு துறையினர் மற்றொரு துறையினரின் அறிவுரைகளை மறுப்பாராயினர். இன்னோரன்ன கருத்து வேற்றுமைகளால் தமிழ் நாட்டின் நிலைமை தாறுமாறாயிற்று.

எல்லாக் கொள்கைகளையும் ஒற்றுமைப் படுத்தி முன்னேற்றப் பாதையில் செலுத்த வல்ல நன்மக்களைப் பெற விழைந்தாள் பாரதத் தாய். நோன்புகள் பல நோற்றாள். ஆங்காங்குப் பல்வேறிடங்களுக்கெனப் பல மக்களை ஈன்றளித்தாள். அங்ஙனமே தமிழ் நாட்டிற்கும் எல்லாத் துறைகளினும் தொண்டாற்றும் திறன், எழுத்தால் மாத்திரமன்று, பேச்சால் மாத்திரமன்று, செயலால் மாத்திரமன்று, எழுத்து பேச்சு செயல் இம்மூன்றாலும், கற்றார் கல்லார் அனைவர் உள்ளத்தையும் கவரும் ஆற்றல், அமைதியே குடிகொண்ட தூய சிந்தை, சினங் காணாத் திருமுகம், யாவர் மாட்டும் உளங் கனிந்தாடும் இன்னுரை, பகைவரையும் நேசிக்கும் பான்மை, மாறுபட்ட கருத்துடையோர் பாலும் நட்புரிமை காட்டி, அவர் தங் கருத்துக்களைப் பொறுமையோடு செவி மடுத்துத் தன் மென்மொழி வாதத்தால் அன்னாரைத் தன் கருத்திற் கிசைவிக்கும் சால்பு, இன்ன பிற பண்புகளை இயல்பாகவே கொண்டுள்ள ஓர் ஆண் மகனை ஈன்றளித்தாள். அம்மகவே தமதரும் பெரும் பணியால், அன்னையின் முன்னைய நிலையை மாற்றிக் களிப்புக் கடலில் ஆழ்த்தி வருபவரும், அறுபதாண்டுகள் கண்டு மணி விழாத் தலைவராக விளங்குபவருமாகிய **உயர் திருவாளர் திரு. வி. கலியாணசுந்தரனார்.**

பிற பற்றுக்கள் தன் பணிக்கிடையூறுமெனக் கருதியோ, இல்லறத்தும் துறவுண்டென்னும் உயர் வாழ்க்கை நெறியை உலகிற் குணர்த்தவோ அச் செல்வனை, இல்லறத் துறவியாக்கி, ஆற்றும் பணிகள் அனைத்திற்கும் உடனிருந்து உதவ ஓர் உத்தம சகோதரரை யளித்துத் தொண்டின் தலை நிறீஇயினாள் அவ்வன்னை.

தாய்த்தொண்டில் தலைநின்ற தனிப்பெருந் தலைவர் கல்வியியல், அரசியல், சமயவியல், சமூகவியல், தொழிலியல் முதலிய துறைகளிற் புகுந்தாற்றிய வீர தீரச் செயல்களைத் தமிழுலகம் நன்கறியும். காங்கரஸ் மகாசபையில் தலைமைப்பதவி வகித்து

மருந்தினும் இனிய தம் சொற்பொழிவால்—கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாகிய சொல்லாற்றலால்—துள்ளிப் பாய்ந்து, அடுக்கடுக்காய்ப் பசுமரத்தாணிபோல் கேட்போருளத்திற் பதிந்து, அவர் தம் சிந்தனை யனைத்தையும் சிதைக்கும் சீரிய வீர முழக்கால்—தமிழ்நாட்டை விழித்தெழச் செய்த தனிச்சிறப்பு நம் தலைவர்க்கே யுரியதாம்.

இருப தாண்டுகளாக இப்பெருந்தகையோடு நெருங்கிப் பழகும் பேறுபெற்றவன் என்ற முறையிற் சில வரையத் துணிகின்றேன்.

எனக்கு நண்பர் உயர்திரு திரு. வி. க. அவர்களுடன் நேர்ந்த பழக்கம் பெரும்பாலும் சமயத்துறையில் வாய்த்ததாகும். திரு. முதலியாரவர்கள் வேதாந்த மகாநாடுகளில் எனது வேண்டுகோளுக் கிணங்கித் தொண்டாற்றுவார்கள். இது கண்ட பழைய சைவ சமய நண்பரிற் சிலர் "இவர் மாயாவாதியாய் விட்டார்" (சிலர் அறியாமையால் வேதாந்த மதம் மாயாவாத மதமென்பர்) எனக் கொண்டு, சைவசமயச் சார்பான கூட்டங்களுக்கு அழைக்கப் பின் வாங்குவராம். என்னே! எல்லாச் சமயமும் ஒன்றேயென்னும் உண்மையை யுணர்த்தி அவற்றை ஒன்றுபடுத்தப் பாடுபடும் இவ்வறிஞரோ அவ்வெறுப்புக்களைக் கண்டு பின் வாங்குபவர்? ஒரு சமயத்தையேனும் இழித்துக்கூறும் இயல்பினை எக்காலத்தும் இவர்பால் யான் கண்டிலேன். அதற்கு மாறாக எல்லாச் சமயங்களின் உயர்வுகளை எடுத்துக்காட்டிப் புகழ்வதே இவரது இயல்பு. எனினும், தம் மத தத்துவங்களைப் புறக்கணிப்பவ ரல்லர். எவரேனும் தாக்கிப் பேசுவதைக் கேட்கச் சகியார். கடவுளுண்மை மறுப்பு, நாட்டில் தலைதூக்கிய காலத்து, அஞ்சாநெஞ்சுடன் அதனைத் தாக்கிப் பொருது எதிர்வாதத்தின் வாயடைத்துப் போகுமாறு செய்து அடக்கிய அரியேறென நண்பர் அவர்களைக் கூறுதல் மிகையாகாது.

எல்லாச் சமயக் கலப்புடைய சமரச சன்மார்க்க சமயமொன்று காண இவர் உள்ளத்துத் துள்ளிப் பாய்ந்து கொண்டிருக்கும் அவா அளவிடற் கரியது. நம் முன்னோர்களின் கொள்கைகளெல்லாம் மூடக் கொள்கைகளென்னும் புதிய நாகரிகப் பித்தர்களுக்கு, மேனாட்டறிஞரின் ஆராய்ச்சி முடிவுகளோடு முன்னோர் கொள்கைகளையும் இணைத்துக் காட்டி, "மூடக் கொள்கை என்பதே மூடக் கொள்கை" என்பதை வற்புறுத்தி, நம் நாட்டின் பண்டைச் சிறப்பை நிலைநிறுத்தி வரும் பெருமை இப் பெரியார்க்கன்றி வேறெவர்க்கு உரித்தாம்? தென்மொழி—வடமொழிப் போர் மிகுந்துள்ள இக்காலத்தும், "இந்தியக் காவியத்துக்குக் கால் கொண்டவர் எவர்? வால்மீகி. * * அவரே பழைய இந்தியக் காவியத் தந்தை. அவர் வாயினின்றும் பிறந்த இராமாயணம் காவிய உலகுக்கோர் இலக்கியம்" (இந்தியாவும் விடுதலையும்) என உண்மையை ஒளியா துரைக்கும் அஞ்சா நெஞ்சம் இவர்க்கு இயல்பின் வாய்த்த தாகும். பழக்கக் கொடுமைக் காட்பட்டார் பலர் வெறுக்கினும்; பெண்ணுரிமைக்காகப் பெண்ணின் பெருமை

பேசிப் பெண்ணுலகத்தை உயர்த்த உழைக்கும் பெற்றியார் இவரையன்றி மற்றியார்? தமிழ் இலக்கிய இலக்கணக் கடலின் கரைகண்ட இப்பேரறிஞர், அனுபவ ஆராய்ச்சிகளால் அனைவரும் வியக்குமாறு அவற்றிற்குப் பொருள் கூறுந் திறன் எல்லார் மாட்டும் இயைவதன்று.

கருத்து வேற்றுமைப்பட்டு இவரோடு உடன்பாடுடையராகாதார் பலரும், எந்நேரத்திலும் சுற்றிலுமிருந்து, இவரது அறிவுரைகளால் ஐயம் நீங்கப்பெற்றவர்களாய் நகை முகத்துடன் செல்வதும், எங்குச் செல்லினும், இவர் வரவை அறிந்து, தாயின் வருகை கேட்ட சேய்கள்போல் பல்வேறு துறையினராகிய முதியோரும் வந்து குழுமி, இருக்கும்போதும் நடக்கும்போதும் பல வினாக்கள் விடுப்பதும், அக் குழுவின் நாப்பண் மென்னடை நடந்துகொண்டே அவரவர்க் கேற்றவாறு இன்மொழிகளால் விடை யிறுத்தல் வாயிலாக ஒற்றுமை யுணர்ச்சி சமரசத்தன்மை யாகிய விதைகளை இவர் விதைப்பதும், கண்கொளாக் காட்சியாய் விளங்கி, பண்டைச் சமய குரவர்களின் இயல்பினை எனக்குச் சித்திரித்துக் காட்டிக்கொண் டிருக்கும்.

இவ்வாறு நண்பர் திரு. வி. கலியாணசுந்தரனார் தமிழ்நாட்டிற்குச் செய்த—செய்கின்ற பணிகள் எண்ணற்றன; இணையற்றன. விரிவுரைக் கிடமேது?

இப் பெரியாரின் மணிவிழா தமிழ்நாட்டின் அணி விழாவாகும்; திருவிழா வாகும். இவ் விழாவிற் கலந்துகொண்டு நம் பெரியாருக்கு வாழ்த்துக் கூறுவோம். நன்றி கூறுவோம். பெருமை பாடிப் புகழுவோம். அவர் தம் நன்மொழிகளைப் பொன்மொழிகளாகக் கொள்வோம். அவரடிச் சுவட்டைப் பின் பற்றுவோம். இன்னும் நீண்டநாளிருந்து தொண்டாற்ற வன்மையளித் தருளுமாறு இறைவனடிகளை இறைஞ்சுவோம். உட னிருந்துதவும் உத்தம சகோதரர் உயர்திரு. திரு. வி. உலகநாத முதலியாரவர்களும் அவர்களைச் சார்ந்த உறவினரும் நற்பேறுக ளனைத்தும் பெற்று இனிதுவாழ ஆண்டவன் அருள் புரிக.

**மணிவிழாத் தலைவர் உயர்திரு. திரு. வி. கலியாணசுந்தரனார்** வாழ்க. தமிழ்வாழ்க, தமிழ்நாடு வாழ்க. இந்தியத்தாய் வாழ்க. இந்தியத் தாய்க்குத் தொண்டு பூண்டுழைக்கும் அன்பர்கள் அனைவரும் வாழ்க! வாழ்க!! வாழ்க!!!

இத்தகைய பெரியோர்களின் பெருமையைத் தமிழ்நாடு உணர்ந்து போற்ற முன்வந்திருப்பது போற்றற்குரிய செயலாகும். பெரியோர்களின் விழாக்களே திருவிழாக்களாம். மற்றவை யெல்லாம் திருவிழா வென்னும் பெயர்க்குரித்தாவன வன்று; தெருவிழாக்களே யாம். சில நாட்களாகக் கம்பர் திருநாள், வள்ளுவர் திருநாள் முதலிய விழாக்களைத் தமிழ்நாடு கொண்டாடி வருதலை நோக்கின், இனி புலவர் திருநாட்கள் பல யாண்டும் கொண்டாடப்பெற்று தமிழ்த்தாயும் தமிழறிஞர்களும் பண்டேபோல் வீறுபெற்று விளங்குவார்களென்னும் பெருமகிழ்ச்சி யாவருள்ளத்தும் மலரும். **"தமிழ்நாடு கண் திறக்கின்றது."**

# வைர விழா வாழ்த்து

(ஸ்ரீ ச. சோமசுந்தர பாரதியார் M. A., B. L.,)

திருவாளர். திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்களின் வைர விழா (அறுபதாண்டு நிறைவு) தமிழர் உவந்து பாராட்டற் குரியது. தமிழர் தலைவருள் முதல் வரிசையில் பல துறைகளில் சிறந்த தொண்டாற்றி, தமிழர் முன்னேற்ற முயற்சியிலும், தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்திலும் ஓவாதுழைத்து வரும் பெரியார் பண்டித முதலியாரவர்களைத் தமிழர் கொண்டாடுவது இயல்பன்றோ? இவர் புகழ் தமிழகத்து மட்டுமன்றி, இந்தியப் பிற மொழி வளாகங்களிலும் பரவி யுள்ளது. ஆங்கிலக் கல்வி நிறையாத தமிழ்ப்புலவர் புதிய இயக்கங்களில் விரிந்த உள்ளத்தோடு ஈடுபடல் இயலாதென்ற கொள்கையைப் பொய்யாக்கி, ஆங்கிலக் கலைப்பட்டம் பெற்றார் பலரினும் தலை சிறந்து, பொதுவாக, மக்கள் நலம் வளர்க்கும் ஆக்க வினைக் களனைத்திலும் ஊக்கி உழைத்து வரும் உயர்ந்த மனப்பான்மை உள்ளவரிவர்; சிறப்பாகத் தீந்தமிழ், சிவநெறி, தொழிலாளராக்கத் துறைகளில் ஊன்றிய காதலுள்ள முடையார்.

சாதி - சமையம் - அரசியல் - பொது உடைமை - சம உரிமை முதலிய எல்லாக் கொள்கைகளிலும் சிறிதும் நடுநிலை பிறழாது, "சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல், அமைந் தொருபாற் கோடாத" சால்புடையார் இப் பெரியார். நம் நாவல நாடு ஏவல் வாழ்வொழித்து, முற்றுரிமையுற்ற தன்னரசு பெற்று முன்னேற முயலும் அரசியற் பொருநர் அறப்போரில் "ஒல்லும் வாயெல்லாம்" ஓவாதுழைத்து மறவர் பெருந்தகை. வஞ்சமும் பொய்யும் கண்டவிடத் தெல்லாம் அஞ்சா தெதிர்க்கும் நெஞ்சம் படைத்தவர். பழந் தமிழுழியப் புது வடமொழியைத் தமிழகத்துப் புகுத்த முதலமைச்சர் முயன்றபோது, அவர் நேர்ந்திற அதிகாரத்திறலையும், காந்தியார்க்கு மைத்துன உறவையும் மதியாமல், அவராட்சிக் கடங்கிய அரசியற் குழுவினரா யிருந்தும், கட்டாய இந்தி புக வொட்டாதென மறுத்து உண்மை உரைக்கத் துணிந்த செவ்வியர். பல்லாற்றானும் தம்மொடு முரணி, வினையிலும் கொள்கையிலும் வேறுபடும் இராமசாமிப் பெரியாரை, தம் குழுத்தலைவரான முதலமைச்சர், பெரியாரின் முதுமையும் "நெஞ்சினுற் பிழைப்பிலாத" நேர்மையும் கருதாமல், அதிகார வெறியால் பதவியினுதவி கொண்டு சிறையிட்ட போது, அக்கொடுமையை வெறுத்துக் கல்லையு முருக்குஞ் சொல்லிற் கனிந்த கட்டுரை எழுதிய கடனறி புலவ ரிவர்.

"நவசக்தி" என்னும் தமிழ்ப் பத்திரிகையின் நல்லாசிரியராய், எல்லார் நலமும் என்றும் பேணி வாய்மை வழுவாத் தாய்மை அறம் பூண்டவர். ஏனைய புதிய கருத்துக்களையும் இனிய எளிய செஞ் சொல்லால் அனைவருள்ளமும் கனிய உரைக்கும் 'நாவரசர்.' எழுதினும் பேசினும் பழுதிலா நடையும், விழுமிய பொருளும்

# தொழிலாளர் இயக்கத்தின் தந்தை

[ஸ்ரீ. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், M.A., B.L., M.O.L.,]



**தொ**ழிலாளிகள் பழைய நாளில் ஒவ்வோர் ஊரிலும் ஊரின் உறுப்பாக விளங்கி வந்தார்கள். ஊரின் வருவாயை அவர்களும் பொதுவில் பங்கிட்டுக் கொண்டு வாழ்ந்தார்கள். இந்த அமைதியெல்லாம் குலையச் சென்ற நூற்றாண்டிலே எந்திர நாகரிகம் பிறந்து பெருத்தோங்கியது. தொழிற்சாலைகள் புகையை வானத்திலே கக்கிக்கொண்டு அரக்கர்களைப் போலக் கிளம்பின. புதுப் பணம் எங்கும் கூத்தாடியது. ஏழைமக்கள் வயிற்றை வளர்க்க இரவும் பகலும் வேலை செய்தனர்; சிறு குழந்தைகளையும் வேலைக்கனுப்பினர். "பணம் பணம்" என்றே எல்லோரும் அலைந்தனர். சேரிகள் எங்கும் பெருகின. இவை பன்றித் தொட்டிலிலும் சீர்கேடானவை; புழுப் புழுக்கும் குடிசைகள்; எமனிட்ட வலைகள்; இவையே நகரங்களின் வேலி. கட்டமைப்பான உடல் வளம் பெற்றவர்கள் இத்தகைய நிலையில் உடலுருக்கி நோயால் மாண்டார்கள். இந்தியாவையும் இந்தப் பேய் பிடித்துக் கொண்டது. துரைத்தனத்தார் தொழிற்சாலைகளை ஆராய அமைத்த கூட்டம் இந்த நிலைமையை விளக்கிக் காட்டியது.

இயற்கையாகவே மேனாட்டில் தொழிலாளர் இயக்கம் தோன்றியது. "வேலை நிறுத்தம்", "கதவடைப்பு" என்ற தொழிற் போர் உலக வாழ்க்கையை அலைக்கும் சுழற் காற்றாய்ப் புகுந்தது. இத்தகைய தொழிலாளர் இயக்கத் தலைவரில் கீர் ஹார்டி என்பவர் ஒருவர். இவர் ஒரு நாள் சென்னைக்கு வந்திருந்தபோது ஸ்பென்சர் கம்பெனியில் சரக்குகள் வாங்கப் போயிருந்தார். அன்றே தமிழ் நாட்டுத் தொழிலாளர் இயக்கம் கருவிருக்கத் தொடங்கியது. இயற்கையின் வியப்புகளில் இது ஒன்று. அன்று திரு. வி. க. அந்த இடத்தில் எழுத்தாளராக வேலை பார்த்து வந்தார். கீர் ஹார்டியின் காட்சி இவர் மனத்தே இன்றும் தொழிலாளர் இயக்க வடிவமாக நிலைத்து நிற்கின்றது. அப்போது திரு. வி. க. இவ்வாறு எழுதும் தொழிலாளியாக இருந்து வந்தார்; தொழிலாளியின் எளிய வாழ்க்கையை நன்கறிந்தார். கனிந்த உள்ளம் என்ன பாடுபட்டதோ? சேரித் தொண்டையே சைவத் தொண்டாகச் செய்து வந்த தம் இளமையில் தொழிலாளிகள்

---

கலந்து கமழும் புலமை வாய்ந்தவர். தனக்கென வாழாப் பிறர்க் குரியாளர். இத்தகவு மிகு தமிழ்ப் பெரியாரை வயதொடு முதிரும் மதியும் கல்வியும் உரனும் ஒழுக்கமும் ஒருங்கு நிறையுமவர் வைர வெள்ளணிவிழ வயர்ந்து தமிழ ரனைவரும் தங்கட னுற்றத் தாழா ரென்பதை நன்கறிவேன். என்னளவில், 'இன்னுமிவர் பன்னூ றாண்டிருந்து தூய தொண்டுகள் ஏயன வியற்றிப் புகழு மின்பமும் பெருகி வாழ்க' எனப் பல்லாண்டு கூறி வாழ்த்தி மகிழ்வேன்.

நிலை இவர் மனத்தை மிக மிக உருக்கி இருத்தல் வேண்டும். "சேக்கிழார் கண்ட புது உலகம்" "கம்பர் கண்ட புது உலகம்" என்ற சொற்பொழிவுகளிலே அந்தப் பழைய நூல்களை எல்லாம் தொழிலுலகக் கண்கொண்டே படித்துத் திளைத்தார் என்பது தெளிவாகிறது. இவர் தமிழோதிய வரலாறும் இவ்வாருக முடிகிறது. தொழிலாளிகள் இருப்பிடமாகிய பிரம்பூருக்குச் சமரசத் தொண்டாற்றப் பனமுறை சென்ற இவரைத் தொழிலாளர்கள் தம்மவராக ஆக்கிக் கொண்டார்கள். அன்னி பெசண்டு அம்மையாரின் ஆதரவும் இத்தகைய பொதுத் தொண்டிலே இவரை ஊக்கியது. B. P. வாடியா, கேசவப் பிள்ளை முதலியோரும் தொழிலாளர்களைப் பற்றி இவருடன் சேர்ந்து எண்ணலாயினர். திரு. வி. க. தமிழ்ப் பண்டிதர் வேலையை விட்டுத் 'தேச பக்தனி'ன் ஆசிரியராயினுர். 'தேசபக்தன்' தமிழ் நாட்டுப் போரொளி; தொழிலாளர் உள்ளத்தே ஒளிரும் உண்மைச் சுடர். அப்போது ருஷ்யாவில் புதுக்காலம் பிறந்தது. அந்தப் புது வாழ்க்கை திரு. வி. க. மனதினைக் கவர்ந்தது. இவர் இந்திய நாட்டுப் பழைய வரலாற்ருேடும் கடவுள் கொள்கையோடும் இந்தப் பொதுமை நோக்கினை ஒன்ருக இயைய வைத்துக் கலையுலகிலே எதிர்காலப் பாட்டைப் பாடத் தொடங்கினுர்.

கருவிருந்த தெய்வப் பிள்ளை உருவடைந்து வெளிவந்தது. சென்னையிலே - ஏன் - இந்தியாவிலேயே முதன் முதலாகத் தொழிலாளர் சங்கம் தோன்றியது. அதுவே, சென்னைத் தொழிலாளர் சங்கம். இச்சங்கம் இந்த ஆண்டு வெள்ளிவிழாக் கொண்டாடியது. அந்த விழா திரு. வி. க. வின் தொழிலாளத் தொண்டின் வெள்ளிவிழா ஆகும்.

இந்தச் சங்கம் தோன்றியதும் கதவடைப்பு இன்னது என இங்கு இருப்பவரும் அறியக் காலம் வந்தது. திரு. வி. க. முதலியோரின்மேல் முதலாளிகள் வழக்குத் தொடங்கினுர்கள். பின்னே பெரிய வேலை நிறுத்தம் துணியாலையில் எழுந்தது. சண்டை பிறந்தாலல்லவா வழி பிறக்கும்? ஆறு மாதம் போர் நிகழ்ந்தது. குண்டுவீச்சுக்கு இரையாகிச் சிலர் இறந்தனர். உயிரையே பலி கொடுத்த இந்த ஏழை மக்களின் உடலங்கள் ஊர்வலமாகச் சென்றன. சென்னை உயிர் பெற்று எழுந்தது. தீண்டாதவரை வேறு பிரிக்க எழுந்த மாயச் சூழ்ச்சிகள் திரு. வி. க. வின் அறவாழியின் முன்னே மறைந்து ஒழிந்தன. திரு. வி. க. முதலியோரை நாடு கடத்த எண்ணிவந்த அரசாங்கத்திற்கும் தொழிலியக்கத்தின் உண்மை நிலை வெளியாயிற்று. தொழிலாளரது வெற்றி ஈதே எனலாம். அந்நாளைய தொழிலாளர் தலைவர்களின் ஒற்றுமையை மிகப் பாராட்டி இன்றும் பேசுகிருர் திரு. வி. க. அந்த ஒற்றுமை பின்னே நிலை குலைந்தமை குறித்து வருந்துகிருர்.

அந்நாளில், திரு. வி. க. பல பல தொழிற் சங்கங்களை நிலைநாட்டுவதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்து வந்தார். இந்த

இயக்கம் துரைத்தனத் துறையிலும் பரவியது. போலீஸ் சங்கமும் தோன்றியது. தொழிலாளர் மாகாண மாநாடு கூடியது; அதன் வரவேற்புத் தலைவர் திரு. வி. க. வே. தொழிலாளர் மத்திய சங்கமும் தோன்றியது. அதற்கும் முதல் தலைவர் திரு. வி. க. வே.

வேலை நிறுத்தத்தின்போது இவர், தமது மனைவியார் மிக மிக நோய்வாய்ப்பட்டு இருந்தும் அதனையும் பாராமல் இந்த இயக்கத்தில் இரவும் பகலும், அந்த அம்மையாரும் மெச்சிப் பாராட்டத் தொண்டாற்றி வந்தார். அந்த அம்மையார் அப்போது உயிர் துறந்தார். இத்தகைய தியாகமும் செய்து தொழிலாளர்க்கு உழைத்த இவரைத் தொழிலாளர் உலகம் மறவாதிருப்பது மிகவும் போற்றத் தக்கது.

திரு. வி. க. அன்பு கனிந்தொழுகும் அரிய மனம் உடையவர். தீமைக்கு அஞ்சும் நெஞ்சு படைத்தவர். ஆனால் தொழிலாளர் மேடையிலோ பெருவீரராக விளங்குபவர். குண்டுகள் வீச்சிடையே குன்றாத உள்ளத்தோடும் உழைப்பவர். போர் ஆரவாரம் எவ்வாறோ எங்கும் பரவி விடுகிறது. முன்னைய உலகப் போர் முடிந்த போது சென்னையில் நிகழ்ந்த தொழிற் போரைக் குறித்தோம். இப்போது நடக்கும் போரிடையும் தொழிற்போர் மூண்டது. குண்டு வீச்சுக்களையும் ஓராண்டுக்கு முன்னே நேரே கண்டோம். அப்போதும் திரு. வி. க. வே. சென்னைத் தொழிற் சங்கத்தின் தலைவர். அமைதியாம் இவர் வடிவம் கொந்தளிப்பிடையே இயங்கி வரக் கண்டோம். அமைதியே முடிவில் வென்றது. இயற்கையின் போக்கு அது; இவர் வாழ்க்கையின் மறை பொருளும் அதுவே ஆம்.

இவர் தொழிலாளர் இயக்கத்தின் தாயும் தந்தையும் படைவீரராகவும் மட்டும் விளங்கவில்லை. தொழிலுலகக் கருத்தைத் தமிழிலே தவழ்ந்து விளையாடி நடந்துவரப் பழகவிட்டுச் சீராட்டிப் பாராட்டி வளர்த்த பெருமையும் இவருடையதே. தொழிலாளரின் 'நவசக்தி' பிறந்த இடம் இவரே ஆம். தொழிலாளரின் முதற் கவிவாணரும் இவரே. தொழிலாளரின் தேவாரமாக இவர் பாடிய 'பொதுமை வேட்டல்' என்றும் நிலைத்து விளங்கும்.



# "செந்தமிழ்ச் சேவகர்"

("தமிழ்ப்பித்தன்")



தீந்தமிழ் நாட்டின் தெய்விக ஒளியாம்
திருவிழை கலியாண சுந்தரச் சுகுணன்
நம்மனோர் ஆற்றிய நற்றவப் பயனால்
நம்மிடை வாழ்ந்து நமக்கே உழைக்கும்
நலம்நிறை நாதன் ! நவமிகு சக்தியால் (5)

அமுதுரை ஊட்டி அகவிருள் அகற்றினன்.
"அந்தணர் அந்நியர்; திராவிடர் தமிழரே.
எங்கள் சமயமே ஏற்ற முடைத்து;
யாங்கள் இறைவன் எழில் முகத்(து) உதித்தமையா"
ஆகிய சாதி சமயச் சழக்குகள் (10)

அறவே ஒழித்து அழிவிலாச் சமரச
சுத்த சன்மார்க்க சுகநிலை தன்னை
தான்கொண் டதுடன் தன்னரும் சோதரர்
தமக்கும் நல்கிய தண்ணளித் தவமுனி
பெண்மையே உலகின் பேரிரும் உயிர்நிலை (15)

என்பதைப் 'பெண்ணின் பெருமை'யால் விளக்கினன்.
செந்தமிழ், பாரதம் செழிப்புற, சேவைகள்
அந்தமில் அளவில் செய்கிறான், "சேவகன்"
அமரரின் உலகு அங்கிலை; இங்குதான்
என்றே ஆக்கினன் எந்தமிழ் நாட்டினை. (20)

அன்னவன் பெருமைகள் சொல்லில்தான் அடங்குமோ ?
இத்தகை வள்ளல் இன்னும் பல்லூழி
வாழ்ந்து மக்களை வாழ்வித் தருளத்
தாழ்ந்த சடையன் சரண்மலர் சாற்றுதும். (24)

# தமிழ்ப் பண்பாடு கண்ட திரு. வி. க.

[ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார்]

ஆயிரக் கணக்கான வருஷங்களுக்கு முன் தமிழ்ப் பண்பாடு என்பதாக ஒன்று தோன்றியது. ஏதோ ஒரு தெய்வ சக்தி அதை நெடுகிலும் பாதுகாத்து வந்ததோ என்று எண்ணத் தோன்றுகிறது.

அகஸ்தியர் சங்கம், பாண்டியர்களது மதுரைச் சங்கம், நெல்லையப்பன் கவிராயர் சங்கம் - இந்த மூன்று சங்கங்களும் சென்னையிலுள்ள ஒரு சங்கத்தை நினைப்பூட்டுகின்றன.

ராயப்பேட்டை சாது அச்சுக்கூடந்தான் அந்தச் சங்கம்.

சென்னையில் ஆங்கிலம் வந்து பண்ணின ஆர்ப்பாட்டத்தில் தமிழுக்கும் இடமுண்டா? தமிழையும் தமிழ்ப் பண்பாட்டையும், பொருட்படுத்துவதற்கு ஆளுமுண்டா? என்று சொல்ல இருந்த காலத்தில் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் தம் வீட்டில் தமிழ்க் கொடியைப் பறக்கவிட்டுக் கொண்டிருந்தார். புலவர்களும் புலவர்கள் அல்லாதவர்களும் திரு. வி. க. வீட்டில் வந்து கூடுவார்கள். திரு. வி. க. வின் தமிழ் ஆர்வம் வந்தவர்களையும் பற்றிக்கொண்டது. ஆர்வத்தோடு தங்கள் ஊருக்குச் சென்றவர்கள் அங்கங்கே தமிழ் ஆர்வத்தை விதைத்து வளர்த்தார்கள். "தேச பக்தன்", பின்னால் வந்த "நவசக்தி" போய் அப்படி வளர்த்த ஆர்வத்தை மேலும் மேலும் தூண்டிக் கொண்டிருந்தன. இந்த முயற்சிகளின் பயனாகத் தற்பொழுது, தமிழ்ப் பண்பாட்டை உணர வேண்டும், வளர்க்க வேண்டும் என்ற ஆசை தமிழ் நாடெங்குமே பரவியிருக்கக் காண்கிறோம். நல்ல முகூர்த்தத்தில் தமிழ் பண்பாட்டியக்கத்தைத் திரு. வி. க. ஆரம்பித்தார்.

சாது அச்சுக்கூடமும், திரு. வி க. வும் நீடூழி வாழ்க!

---

## மறவா நாட்கள் (ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்.)

காந்தியவர்கள் இந்திய அரசியலில் தியாகமும் துணிச்சலும் புகுத்திய காலம் இருபத்துநான்கு ஆண்டுகளுக்கு முன். அப்போது தென்னாட்டில் எதிர்ப்பை விட்டுவிட்டுப் பொறுப்பை எடுத்துக்கொண்ட நான்கைந்து தலைவர்களில் ஒருவர் ஸ்ரீமான் திரு. வி. க. அவர்கள். பகைமையும் ஆகுலமும் போய் அமைதியும் நோன்பும் சாதனங்களான அதிசயத்தைக் கண்ட நாட்கள் — ஆங்கிலப் பிரசங்கங்கள் போய்த் தமிழன்றி வேறு பேச்சுத் தெரியாத பாமரர்க ளிடையே வேலை துவக்கிய புரட்சி நாட்கள்—தொழிலாளர்களைத் திரட்டிச் சங்கம் நிறுவும் அபாய நெறி முதல் முதலில் தோன்றிய நாட்கள்—அப்போது சுகமான பள்ளித் தொழிலை விட்டு அரசியல் அலைகடலில் புகுந்தவர் ஸ்ரீ திரு. வி. க. அக்காலத்தில் வேலை செய்த அரசியல் தொண்டர்களுக்குத்தான் தெரியும் திரு. வி. க. உள்பட எங்கள் சிலருக்குள் வளர்ந்த அன்பும் கட்டுப்பாடும் கூட்டுறவும். பிறகு எவ்வளவோ சம்பவங்கள் நடைபெற்று விட்டன. ஆயினும், அவருடன் கூடி நாங்கள் சிலர் அந்நாட்களில் செய்த தொண்டில் கண்ட மகிழ்ச்சியை என்றும் மறக்க முடியாது.

# அரசியல் சேவையும் தமிழ் வளர்ச்சியும்

[ஸ்ரீ பெ. நா. அப்புஸ்வாமி பி. ஏ., பி. எல்.,]



ஸீதாபிராட்டியைத் தேடுமாறு தன்னுடைய வீரர்களை நாலு பக்கமும் அனுப்பிய சுக்ரீவன் தென்திசையிலுள்ள தமிழ் நாட்டின்கண் தேடுவோருக்கு ஓர் எச்சரிக்கை செய்தான். 'அங்கே செல்லும்போது நீங்கள் பொதியின் மலையருகே செல்லாதீர்கள்! அங்கே சென்றால் அங்குள்ள அகத்திய முனிவருடைய தமிழ்ச் சங்கத்தில் ஈடுபட்டு அங்கேயே தங்கி விடுவீர்கள். பிற யாவற்றையும் மறந்து விடுவீர்கள்! ஆதலால் அதை விட்டு ஒதுங்கிச் செல்லுங்கள்' என்பது அவன் செய்த எச்சரிக்கை. தமிழ் மொழிக்கு அத்துணை வசீகரத்தன்மை இருப்பதாகக் கம்பர் கருதுகிறார்.* தமிழில் ஈடுபட்டு விட்டால் உலக விவகாரங்களை யெல்லாம்-அவை எவ்வளவு முக்கியமானவைகளா யிருந்தாலுமே-மக்கள் மறந்து விடுவார்கள் என்பது கம்பரது அபிப்பிராயம்.

பொதுவாக நோக்கும்போது, இக்காலத்திலும் இவ்வாறே நிகழ்ந்து வருவதைக் காண்கிறோம். தமிழ்மொழியில் ஈடுபட்டுள்ள பெரும் புலவர் அனைவரும் வேறொன்றையும் நாடுவதில்லை. ஒரு சிலர் சமய விவகாரங்களில் சற்றே தலையிடுகிறார்கள். பிறர் அனைவரும் ஏகாக்கிர சித்தத்தோடு தமிழையே பயின்று வேறொன்றிலும் தமது கருத்தைச் செல்ல விடுவதில்லை. இது தமிழ்மொழியின் சிறப்பா யிருக்கலாம்; அல்லது அதில் ஈடுபட்டுள்ள புலவர்களின் மனத்தின் சிறப்பியல்பா யிருக்கலாம். இலக்கிய வளர்ச்சி ஒன்றையே கருதுபவர்கள் இதை மிகவும் வியந்து கொண்டாடலாம்; பிற ஈடுபாடு அனைத்தும் தமிழ்மொழிச் சேவையன்று என்று அவர்கள் உறுதியாக நினைக்கலாம்.

ஆயினும் உலக வாழ்வில் பற்பல துறைகளில் ஈடுபட்டவர்களாயும், பல்வகையான ஆசாபாசங்களை யுடையவர்களாயும் உள்ள சாமானிய மக்களுக்கு இது ஒரு குறைபாடாகவே தோன்றுகிறது. 'தமிழ் நாட்டில் பிறந்து, தமிழ் இலக்கியத்தில் ஊறி, தமிழ் மக்களின் பண்புகளை நன்குணர்ந்து, நுண்ணறிவிலும் கல்வியிலும் தலைசிறந்து அவற்றால் அடக்கமும் அமைதியும் நடுநிலைமையும் பெற்ற அறிவாளிகள் தமிழ்ச் சமுதாய சேவையில் ஈடுபடவில்லையே, அவர்கள் ஈடுபடுவார்களானால் நாட்டுக்கு எவ்வளவோ நலம் உண்டாகுமே' என்று அவர்களிற் பலர் வருந்துவது

---

*தென்தமிழ்நாட்டகன்பொதியில் திருமுனிவன்
தமிழ்ச்சங்கம் சேர்கிற்பிரேல்
என்றும்அவண் உறைவிடமாம்; ஆதலினால்
அம்மலையை இறைஞ்சினகி.

—கிட்கிந்தா: நாடவிட்ட: 31

இயல்பே. பல வருஷங்களுக்கு முன்பு, ஆங்கிலங் கற்று, ஆங்கில நூல்களைப் பயின்று, அவற்றின் மூலமாகத் தேசீய உணர்ச்சி, அரசியல் விவகாரம், ஆசாரச் சீர்திருத்தம், சமுதாய சேவை முதலிய நல்லெண்ணங்கள் தம் மனத்துள் எழப்பெற்ற சிலர் நாட்டின் நலத்தை நாடிப் பலவாறாக உழைத்து வந்தார்கள். இவர்களுடைய முயற்சி, பெரும்பான்மையும், ஆங்கில மொழியின் மூலமாகவே நிகழ்ந்து வந்தது. ஆனால், இவர்கள் மக்களின் உளத்தைக் கவர்வது தாய்மொழியின் துணையின்றி இயலாது என்பதை உணர்ந்து, தமக்குத் தெரிந்ததாயும் குறைபாடுள்ளதாயும் இருந்த, தமிழின் மூலமாகவும் பிரசாரம் செய்து வந்தார்கள்.

சுமார் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்வரை இந்த நிலை இருந்து வந்தது. அப்போது தமிழில் பெரும் புலமை வாய்ந்த ஒருவர் அரசியல் தொண்டில் ஈடுபட்டு, அழகிய தமிழில் பிரசங்கங்கள் செய்யவும், பத்திரிகை நடத்தவும் முன் வந்தது பலருக்கும் அளவிலா வியப்பையும் ஆநந்தத்தையும் அளித்தது. பழந் தமிழ் இலக்கியங்களின் சுவையில் திளைத்து, மீண்டும் மீண்டும் தமிழ்ப் பெருங் காவியங்களைப் படித்துப் பயின்ற அவர், நவீனமான நவநாகரிக வாழ்க்கையில் கலந்துள்ள கருத்துக்களையும் தமதாக்கிக் கொண்டு, இலக்கண வழுவின்றி, தெளிந்த தமிழ்ச் சொற்களின் மூலம், மக்களின் மனங்களைக் கொள்ளை கொள்ளுமாறு, உணர்ச்சி வேகம் ததும்பப் பல பிரசங்கங்களைச் செய்து வந்தார்; பல கட்டுரைகளை எழுதி வந்தார்; புறநானூறு முதலிய மிக் மிகப் பழமையான தமிழ் நூல்களி லிருந்தும், பிற்கால நூல்களி லிருந்தும் அரசியல் விஷய சம்பந்தமாகவுள்ள தக்க மேற்கோள்கள் பலவற்றை எடுத்துக் காட்டினார்; மேலை நாடுகளில் செழித்து வளரும் நவீன அரசியல் கருத்துக்களைத் தமிழ் மொழியில் புகுத்தி, அதை வளம் பெறச் செய்தார். அவர் தாம் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் என்று சொல்ல வேண்டுவதில்லை. அக்காலத்தில் பல பிரசங்கிகளுக்கும் எழுத்தாளர்களுக்கும் அவர் ஒரு மார்க்கதரிசியாக இருந்தார். தம்மை யறியாமலே பலர் அந் நாளில் அவருடைய பிரசங்க நெறியைப் பின்பற்ற முயன்றார்கள்; அவருடைய எழுத்து முறையைத் தம்மால் இயன்ற அளவில் அநுசரிக்கத் தொடங்கினார்கள். தமிழ் நடை அரசியல் துறையில் வளம்பெற்று விரிவடைந்ததற்கு அவரை ஒரு முக்கிய காரணராகக் கூறவேண்டும். அரசியல் சேவையால் தமிழை வளர்த்த பெருமையில் பெரும்பகுதி திரு. வி. கலியாணசுந்தர முதலியாரைச் சேர்ந்ததென்றே நான் கருதுகிறேன்.

---

# வாழ்த்துப்பா

(மா. அ. தேவராஜன்

★

## வண்ணக ஒத்தாழிசைக் கொச்சகக் கலிப்பா

**தரவு:—**

உலகநிலை முன்னேற, உயர்இந்தியா வடிமைக்—
கலகநிலை பின்னேறக் கனித்தமிழர் நிகழ்ந்தேற
இலகும்இறை அருளேற, இயற்கையன்னை எழிலேறப்
பலகலையும் சிறப்பேறப் படித்தவர்கள் புகழேற
நலகனித்தாய்த் தமிழ்நாட்டை நயந்துவந்து கதிர்போல்நன்(று)
அலகில்ஒளி உமிழ்ந்தேற்றும் **அறிஞ!** **திரு. வி. க. வே** கேள்!

**தாழிசை:—**

அன்றுதமிழ்க் கழகமமர்ந்(து) அருள்இறைவ னெடும்தமிழை
நன்றுபுரக் தினிதோம்பி நலம்செய்த புலவரின்சீர்
என்றும்நிலை யாயிருக்க எண்ணியுவந்(து) ஆங்கிலத்தில்
ஒன்றுமனம் தனைத்திருத்தி யுயர்தமிழைப் போற்றினையே! 1
தாங்கரிய கொடுமைநிலை தருமடிமை தனைஒழிப்பான்
ஓங்கியுழை **அரவிந்தர்** உயர்ஞானி அடிநண்ணிப்
பாங்குடன்நல் ஊதியமும் பணித்ததொழில் வெறுத்தொதுக்கி
நீங்கித்தே சத்தொண்டு நெறிமுறையில் ஆற்றினையே! 2
உடம்புழைப்பு சற்றுமிலா(து) உளம்விழைந்த படியெல்லாம்
இடம்பமுடன் இடம்பொருள் ஏவலுமமைத்துள் ஏக்கமின்றி
மடமிகவாழ் முதலாளி, தொழிலாளி தமைவருத்தும்
கொடுமைநிலைக் கிரங்கியவர் குடியுயரத் தேற்றினையே! 3

**அராகம்:—**

ஒருபெரும் இறையடி ஒருகொடி பொழுதுமுள்
பிரிவின்றி அருள்பெறப் பெரிதுளம் பரவி,இல்
வருவிருந் துளமிக மகிழ்ந்துண வயிலநல்
திருமுகம் மலர்ந்திசை செழுந்தமிழ் மொழியினை! 1
அயர்விலா துழைத்திடும் அரியமெய்த் தொழிலவர்
துயர்வுறு இயக்கமும் அறிவுடன் அளித்துவிண்
புயலளி மழையென அருள்பொழிந் தவர்களும்
நயமுடன் நலமிக அருளுமின் விழியினை! 2
அமிழ்தென இனித்திடும் தமிழ்,தமிழ் எனதுயிர்
இமிழ்கடல் எனத்தமிழ் தனைமிகப் பரப்பிட
நமர்தமர் எவர்களும் நனிவிழிப் புறத்தினம்
கமழ்புகழ் விரிவுரை பொழிந்திடும் தொழிலினை! 3
மொழுமொழு மொழுவென எழிலுடன் உயர்ந்தநம்
செழுமைபா ரதம்பிறர் அரசினால் அடிமையாய்
இழிவுறும் வகைகெட இயங்குபல் வழியிலும்
முழுமன தொடும்செல முனைந்திடும் கழலினை! 4

**அம்போதரங்கம்:—**

உலகிடை ஒருவராய் ஓங்கி நின்றுமில்
உலகிடை பலருளத் தொடுங்கி நின்றனை!
தமிழ்க்கடல் பருகிடும் அகத்தியர் ஆயுமத்
தமிழ்க்கடல் பரப்பிடும் சம்புவே ஆயினை! 1
செந்தமிழ் மைந்தர்க்கோர் செம்மையா சிரியன்நீ;
**விந்தைசன் மார்க்கத்தில் வியன்செய்மா றுக்கன்நீ;**

இந்திய நாட்டிற்கோர் இலக்கியத் தலைவன்நீ;
நம்தமிழ் நாட்டிற்கோர் நற்றமிழ்த் தொண்டன்நீ. 2

சைவத்தில் பிறந்தோய்நீ;
சமயநிலை கடந்தோய்நீ;
மெய்வழியில் உழைப்போய்நீ;
பொய்வழியை ஒழிப்போய்நீ;
சொற்பொழிவில் வல்லோய்நீ;
சுடர்எழுத்தில் நல்லோய்நீ;
நற்பணியில் எறும்பேநீ;
நன்னெறியில் பசுவேநீ; 3
பெரியைநீ; இளைஞன்நீ;
பித்தன்நீ; அறிஞன்நீ;
அரியைநீ; எளியைநீ;
அன்பன்நீ; வன்பன்நீ;
தலைவன்நீ; தொண்டன்நீ;
கலைஞன்நீ; கற்போய்நீ;
புலவன்நீ; புரப்போன்நீ;
புறத்தோன்நீ; அகத்தோன்நீ; 4

**தனிச்சொல்:—**

எனவாங்கு,

**சுரிதகம்:—**

கற்பனை கழன்றமெய்ச் சொற்புகழ் ஏத்திநின்
பொற்கழல் வாழ்த்துவான் போந்தனம்; புலவோய்!
உன்னும்நல் லாற்றினும் உழைத்தினி(து) அரும்தமிழ்க்
கன்னித் தண்புகழ் நன்னர்ப் பரப்பித்
தொழிலாளி கட்கொரு தூணய் நின்(று)இறை
எழிலார் இயற்கை இன்னெறி படர்ந்துநம்
அடிகள் அருட்பா அறிவித் தாங்குயர்
படிகள் காட்டிப் பரம்பொரு ளின்பம்
தரும்**சம ரசசன் மார்க்கச் சங்கம்**
பெரும்**சம தருமக்** கோளுடன் பிறங்குவான்
வழிநலம் வகுத்துநின் வழிவழி என்றும்,
**சாமிநா தைய**ரெனத் தமிழிற் சிறந்தும்
ஏழுறு **பெரியார்** என்றறி வோங்கியும்
**காந்தி யடிகள்**எனச் சாந்தம் பொருந்தியும்,
**தாகூர்** எனக்கவி தனிற் சிறப்புற்றும்
வாகெழில் **சுபாஷென** மாத்தொண் டாற்றியும்
**ராமலிங் கக்கிருஷ்ண பரமம் ஸ**ரொடும்
தூய்மை **விவேகா நந்தர்** ஞானமும்,
பெறுபதம் பிறவும் பெற்(று)இவ் **அறுபதோடு,**
**அறுபதாண் டுகள்நலம்** அடைந்தினி துயர்ந்து
புவிபுகழ்க் காவிரிப் புனல் யாறென்ன
அமிழ்துறழ் குறளெனத் தமிழென இசையென
எவர்க்கும் உதவிவிண் மணியென இலகி
"நவசக்தி" யுடனே நாளும் வாழியர்!
**புவியினில் புகழுடன் வாழியர் நலமே!**

# உலகம் வாழ்க!

(வித்வான். மு. வரதராசனர் B. O. L.)



திரு. வி. க. தலைமையின் கீழ் பேசவேண்டும் என்று சொற்பொழிவாளர்கள் விரும்புவது வழக்கம். இலக்கியத் துறையிலும் சமயத்துறையிலும் அரசியல் துறையிலும் இவ்வாறு அவர் தலைமையின் கீழ் பேசுவதில் எல்லாருக்கும் ஒரு மகிழ்ச்சி உண்டு. இரண்டு மூன்றுநாள் நடக்கும் ஆண்டுவிழாப் போன்ற கூட்டங்களில் இருவர் மூவர் தலைவராக அமைவதும் உண்டு. அப்போது சொற்பொழிவாளர் பலரும் தம் பேச்சுத் திரு. வி. க. தலைவராக இருக்கும் நாளில் வரவேண்டும் என்று விழைந்து அதற்கு ஆன முயற்சியும் செய்வார்கள். மற்றத் தலைவர்கள் என்றால், சொற்பொழிவார்களுக்கு வெறுப்பும் மறுப்பும் தோன்றுவதே பெரும்பான்மை.

இதற்குக் காரணம் என்ன? வேறொன்றும் இல்லை. மற்றவர்கள் தலைமை ஏற்று நடத்தும் கூட்டங்களில் முடிவுரை அமைதியாக முடிவது அரிது. தலைவர்க்கும் சொற்பொழிவாளர்க்கும் இடையே சிறு குறும்போ பெரும் போரோ நிகழ்ந்து கூட்டம் முடிவுறும். கேட்டவற்றில் நல்லன எல்லாம் மக்கள் மறந்து விடுவார்கள். குறும்பும் போருமே மனதில் குடி கொள்ளப்பெற்று மக்கள் வீடு நோக்குவார்கள்.

பேச்சாளர் யானையைத் தாம் நன்றாகக் கண்டதாகவும் அதை நான்கு உரல் என்று அறிந்ததாகவும் கூறுவார். தலைவர் தமக்கு அனுபவம் மிகுதி என்றும் யானையை இரண்டு முறம் என்று தெளிந்ததாகவும் கூறுவார். உரல் ஒரு கட்சியாகும். முறம் ஒரு கட்சி யாகும். முடிவுரை கட்சிப் போராகும். திரு. வி. க. தலைமைத்தொண்டு ஏற்றிருந்தால், "யானை என்றும்.........உரல் என்றும்......இவை போன்ற சிறந்த கருத்துக்களை என் நண்பர் உங்களுக்குத் தெளிவாகவும் அழகாகவும் விளக்கமாகவும் எடுத்துரைத்தார். அவருக்கு என் நன்றி உரித்தாகுக. அவரைப் போன்ற அறிஞர்கள் நீடூழி வாழ்ந்து இந்தத் தமிழ்நாட்டிற்குத் தொண்டு செய்யவேண்டும்" என்று முடிவுரையின் முடிவில் கூறி விட்டுத் தனியே சொற்பொழிவாளருடன் பேசி மகிழ்வித்து ஊக்கமளிப்பார்.

**தமிழ்நாட்டில் யானையை உரலாகவும் முறமாகவும் பார்க்கின்றவர்களே மிகப் பலர். யானையை யானையாகப் பார்க்கும் அறிஞர் ஒரு சிலரே. அவர்களுள் திரு. வி. க. தலையானவர்.**

தமிழ் நாட்டில் சாதிகள் பல; சமயங்கள் பல; அரசியல் கட்சிகள் பல; மொழிக்கட்சிகள் பல. இத்தகைய நாட்டில் பிரிவுக்கே

பெருகியிருத்தல் இயற்கையே அன்றோ? ஆனல் பிரிவுகளுக்கு இடையே ஒற்றுமை வேண்டுமா? வேண்டாமா? ஒற்றுமை யாரால் இயலும்? சாதிக் கண்ணும் சமயக் கண்ணும் கட்சிக் கண்ணும் கொண்டு பார்க்காமல், பொதுமைக் கண்கொண்டு யானையை யானையாகப் பார்க்க வல்லவர்கள் இந்த நாட்டிற்கு இப்போது தேவை.

வடநாட்டில் சமய உலகம் நிலைகலங்கித் தடுமாறினபோது தோன்றிய பெரியார் ஒருவர். அவரே இராமகிருஷ்ணர் என்பவர். அவர் சைவராக இருந்தார்; வைணவராக வாழ்ந்தார்; கிறிஸ்துவராகத் திகழ்ந்தார்; முகம்மதியராகப் பயின்றார்; இவ்வாறே மற்றச் சமயத் துறைகளிலும் புகுந்து பார்த்தார். 'வேறு படும் சமயமெல்லாம் புகுந்து பார்த்த' அவர், 'எல்லாம் பரம்பொருளின் விளையாட்டே' என்றும், 'மாறுபாடும் கருத்து ஒன்றும் இல்லை' என்றும் தெளிந்தார். ஒரு நாட்டு மக்களுக்கு இராமகிருஷ்ணர் போன்ற பொதுமைப் பெரியாரால் நன்மை விளையுமா? அல்லது, வேறுபாடுகளையே பெருக்கிச் சமயங்களின் பெயரால் கொலையும் கொள்ளையும் குழப்பமும் குருதி வெள்ளமும் காணும் மற்றத் தலைவர்களால் நன்மை விளையுமா? உண்மையை யார் அறிதல் கூடும்? சுத்த சைவமும் வீரவைணவமும் தேங்கிய கிறிஸ்தவமும் அழுந்திய முகம்மதியமும் புதைந்த பௌத்தமும் உண்மை காணல் இயலுமோ? இயலாது, இயலாது. பொதுமை வேட்கையுற்ற உள்ளமே—சுத்தம் வீரம் அழுத்தம் ஆர்வம் என்று செருக்கித் தேக்கமடையாத உள்ளமே உண்மை உணர வல்லது.

திரு. வி. க. சமய உலகில் மட்டுமன்றி, கலை உலகிலும் அரசியல் உலகிலும் பிறவற்றிலும் பொதுமை காணும் பெரியார். ஒரு துறையில் வாழ்நாள் முழுதும் தேங்கிக் கிடக்க அவரால் இயலாது. பல துறையிலும் பரந்து வாழ்ந்து வளர்ந்து ஓங்குவதே அவர் பண்பு. ஒரு துறையில் தேங்கிக் கிடப்பவர் அவர் இயல்பை அறிதல் அரிதே. குறுகிய மனப்பான்மை விரிந்த மனப்பான்மையை அறிதல் முடியுமோ?

ஒரு நாடு அல்லது மொழி அல்லது சமூகத்தின் பிற்போக்குக்குக் குறுகிய மனப்பான்மையே காரணம்; முன்னேற்றத்திற்கு விரிந்த மனப்பான்மையே காரணம். இது மறுக்கப்படாத உண்மை. தமிழ்நாட்டின் அரசியலில் குறுகிய மனப்பான்மையே செல்வாக்குப் பெற்றிருக்கின்றது; மொழியுலகத்திலும் அவ்வாறே; பிற துறையிலும் அவ்வாறே. அங்கங்கே சிலர் தோன்றி; தாம் பிடித்த முயலுக்கு மூன்றேகால் என்கின்றார்கள்.

எல்லாவற்றிலும் உயர்ந்த அரசியல் கொள்கையாகிய பொதுவுடைமையைப் பற்றித் திரு. வி. க. விரிவாகப் பேசுவார். கார்ல் மார்க்ஸ் முதலான அறிஞர்களும் கூறாத புதுப்புது உண்மைகள் அவர் பேச்சில் காணலாம். திட்டுதல் இல்லாமல் வெட்டுதல் இல்லாமல் உயர்ந்த உணர்வை எல்லாருக்கும் ஊட்டுவார். அவருடைய அரசியல் பேச்சு வாய்வீரமாக இருக்காது.

சிறந்த இலக்கியத்தைப்பற்றித் திரு. வி. க. பேசும் முறை தனிச் சிறப்புடையது. மற்றவர்கள் வெறும் பதவுரையோ

பொழிப்புரையோ கூறுவார்கள்; அல்லது நயம் நயம் என்று சொல்லி வீண் கதை பேசுவார்கள்; அல்லது ஒரு தொடர்பும் இல்லாமல் தங்கள் பெருமையைச் சாற்றியோ பிறர் குறையைச் சொல்லியோ சொற்பொழிவுக் காலத்தைக் கழித்து விடுவார்கள். தவறி நன்றாகப் பேசினாலும் தாங்கள் பாடம் கேட்டு அறிந்த கருத்துக்களைப் பல ஆண்டுகளாகப் பேசியவாறே பாடும் பெட்டி போல் பேசுவார்கள். கேட்டவர் பலருக்கு முக்காற் பகுதி விளங்காது. ஆயினும், கோயிலிலும் வீட்டுச் சடங்குகளிலும் மந்திரங்களை ஒலிக்கக் கேட்டபின் மகிழ்வதுபோல் மகிழ்வார்கள். "என்ன என்னவோ பேசினார். அப்பா! என்ன திறமை! மூச்சு விடாமல் பேசினாரே! நிறையப் படித்திருக்கிறாரே" என்று பேசிக்கொண்டு வீட்டுக்குத் திரும்புவார்கள். திரு. வி. க. பேச்சில்—சிறந்த இலக்கியப்பேச்சே ஆயினும் செந்தமிழ்ச் சொற்களை இடையிடையே எடுத்தாண்டார் எனினும்—விளங்காத பகுதி இல்லை. எல்லோருக்கும் அரிய விருந்தாக உயர்ந்த கருத்துக்களை எடுத்துக் கூறுவார். அவர் பேச்சில் வெறும் பாட்டும் உரையுமே அல்லாமல், பண்டைக்கால அரசியல், இக்கால முறை, நாகரிக இயல்பு, சமூக இயல், கைத்தொழில் வளர்ச்சி, கலை வளர்ச்சி, பொருளியல், மணவியல், அறிவியல், சீனநாட்டுக் கன்பூஷியஸ் முதல் மேற்கு நாட்டுக் காண்ட் வரையுள்ள பண்டை அறிஞர்கள் ஆராய்ச்சி, எச். ஜி. வெல்ஸ், பெர்னட்ஷா முதலான இக்கால அறிஞர்கள் கருத்துக்கள், மேடம் பிளாவட்ஸ்கி முதலான ஆத்திகர் கொள்கைகளுமாகிய புதுமைகள்—என்னும் இவையெல்லாம் திரு. வி. க. பேச்சில் செறிந்த செல்வங்களாகும். இவற்றைக் கேட்ட அறிஞரும் அறியாதாரும் கூட்டம் முடிந்தவுடன் நேராக வீட்டுக்குச் செல்ல மனமின்றி, அவரைச் சூழ்ந்து மேலும் பல வினவுவர்; அறிய முயலுவர். இவ்வாறு இவர் தமக்கு, இயல்பான அறிவு வேட்கையைப் பிறரிடத்திலும் தூண்டுவார். அவர்கள் மேலும் மேலும் அறிய விரும்புவார்கள். ஆனால் ஒரு சிலர் மட்டும் அவர் பேச்சை வெறுத்துப் புழுங்குவார்கள். அவர்கள் வெறுப்புக்குக் காரணம் வேறொன்றும் இல்லை; பொறாமையே. "இலக்கியப் பேச்சில் நயம் சொல்லாமல், இது என்ன? அது என்ன? அரசியல் ஏன்? அறிவியல் ஏன்? பாட்டுத் தெரியாவிட்டால் வீண் பேச்சுப் பேசத் தெரிந்துகொண்டு, புலவர்கள் என்று வந்து விடுகிறார்கள்" என்று அந்தச் சிலர் முணு முணுப்பர்! அந்தோ! இலக்கியத்திற்கும் வாழ்விற்கும் உள்ள தொடர்பு அறிவார்! மாத்யூ ஆர்னல்ட் போல வாழ்க்கையின் ஆராய்ச்சியே இலக்கியம் என்பது தெளியார்!

செய்யுள் இயற்றவல்ல பலர்க்கு உரை நடை எழுதும் வன்மை அமைவதில்லை. உரைநடை எழுதவல்ல சிலர்க்குப் பாட்டு அமைவதில்லை. செய்யுளுக்கும் உரை நடைக்கும் உரிய இலக்கண நூல்களையெல்லாம் துறைபோகக் கற்ற சிலர்க்கு ஒன்றுமே எழுத வருவதில்லை. தப்பித் தவறி உரைநடை எழுதவும் செய்யுள் இயற்றவும் ஒருங்கே வன்மை பெற்ற சிலர் இருப்பின்,

அவர்களுக்குக் கூட்டத்தில் பேச வராது. பேசவல்ல சிலர்க்கு எழுதவும் வராது; செய்யுள் இயற்றவும் வராது. **திரு. வி. க. எழுதவும் இயற்றவும் பேசவும் ஒருங்கே வல்லவர்.** அவர் எழுதிய தமிழ்நூல்கள்போல் பயன் மிகுந்த சிறந்த உரை நடை நூல்கள் வேறு இல்லை. காலத்திற் கேற்ற புதிய கருத்துக்களை உயர்ந்த பாக்களாகப் பாடியுள்ள நாட்டுப்பாடல், முருகன் அருள் வேட்டல், திருமால் அருள் வேட்டல், பொதுமை வேட்டல் முதலான பாடல்கள் பாடும் ஆற்றலைக் காட்டுகின்றன.

அவருடைய சொல்வன்மையைத் தமிழ்நாடு முப்பது ஆண்டுகளாக அறிந்து போற்றி வியந்திருக்கின்றது. அந்தத் துறையில்தான் நகர மக்களும் அவரை நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கின்றார்கள். சென்னை நகர மூலை முடுக்குகளிலும் தென்னிந்தியாவின் பேரூர் சிற்றூர்களிலும் திரு. வி. க. தெரிந்தவரா யிருப்பதற்குக் காரணம் அவர் ஆற்றியுள்ள ஆயிரக்கணக்கான சொற்பொழிவுகளே—எளிய இனிய உயர்ந்த சொற்பொழிவுகளே. **எழுதவும் பாடவும் பேசவும் வல்ல இவருக்கு மற்றொரு பெருஞ் சிறப்பு உள்ளது. அதை நாடு என்று உணருமோ? திருவள்ளுவர், தாகூர், ஷேக்ஸ்பியர்போல் புதிது புதிதாக எண்ணும் ஆற்றல் இன்று இவரிடம் உள்ளது. அதுதான் ஒரு நாட்டை வாழ்விக்க வல்லது; ஒரு மொழியைப் போற்ற வல்லது; உலகத்தைக் காக்க வல்லது. உலகம் வாழ்க! திரு வி. க. எண்ணம் வாழ்க!**

---

# தொல்காப்பிய ஐயர் திரு. வி. க.

**(P. N. வைத்தியநாத சுவாமி, B. Sc.,)**

அன்று அந்த வீட்டின் தமிழ்த் திருமணம்; திரு. வி. க. வின் தலைமையில் நடந்துகொண்டிருந்தது. வெளியூர் நண்பர் அவர்; கூட்டத்தில் இடிபட்டுக்கொண்டு உள்ளே வந்து சேர்ந்தார். திரு. வி. க். வை உற்று நோக்கிவிட்டு, "யாரையா, இந்த ஜிப்பா ஐயர்" என்று கேட்டார். நான் புன்முறுவலோடு, "இவர்கள்தான் கலியாணசுந்தர முதலியார்" என்றேன். "ஆ! திரு. வி. க. இவர் தானா?" என்று அன்பு கலந்த ஆச்சரியத்தோடு கேட்டார். அதே சமயம் அவரையும் மறந்து அவர் கைகள் அஞ்சலி செய்தன.

இதிலிருந்து பெரியார் திரு, வி. க. வைக் காணும்போதெல்லாம் எனக்கு இந்நினைவு வரும். "தொல்காப்பிய ஐயர் இவர்" என்று நான் என் வாலிப நண்பர்களுக்கு சொல்வதுண்டு. "பொய்யும் வழுவும் புகுந்த பின்னர், ஐயர் யாத்தனர் கரணம் என்ப." இது தொல்காப்பியர் வாக்கியம். இங்கு வரும் ஐயர் பிறப்பைக் குறிப்பிடவில்லை. சீலத்தில் சிறந்த திரு. வி. க. போன்ற பெரியாரையே குறிப்பிடும். இந்தத் தொல்காப்பிய ஐயர் ஆண்டுகள் ஆயிரம் வாழ்க!

# கலியாணசுந்தரர் அல்லது தமிழ்க் காதல்

(ஸ்ரீ பி. ஸ்ரீ. ஆச்சாரியா.)



'காதல்' என்பது ஒரு குணம்; அது கண்ணால் காணும் பொருளன்று என்பதை அறியாதார் யார்? எனினும், பெண்கள் ஒரு சமயம் அந்தப் பொருளை மிதிலா பட்டணத்து வீதியிலே பார்த்து விட்டார்களாம், இராமபிரான் ஊர்கோலமாகப் போன காலத்திலே.

கண்ணினால் காதல் என்னும்
  பொருளையே காண்கின் றோம்; இப்
பெண்ணின் நீர் மையினால் எய்தும்
  பயன் இன்று பெறுதும் என்பார்
மண்ணின்நீர் உலந்து வானம்
  மழையற வறந்த காலத்(து)
உண்ணுநீர் கண்டு வீழும்
  உழைக்குலம் பலவும் ஒத்தார்.

என்று அந்தக் காட்சிக்குக் கம்பரே சாட்சி சொல்லுகிறார். இப்படியே நானும் ஒரு சமயம், "தமிழ்க் காதலைக் கண்ணினால் காண்கின்றோமே! ஆஹா, என்ன பேறு பெற்றோம்!" என்று அதிசயித்தேன். இந்தக் காட்சி எனக்கு முதல் முதல் கிடைத்தது சாத்தூரிலே பல ஆண்டுகளுக்கு முன் ஒரு தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு விழாவில்.

திரு. வி. கலியாணசுந்தர முதலியார் சொற்பொழிவு செய்து கொண்டிருந்தார். பொருளைக் குறிக்கும் சொற்பொழிவுகள், பொருளைக் குறைக்கும் சொற்பொழிவுகள், பொருளை மறைக்கும் சொற்பொழிவுகள் எத்தனையோ அதற்குமுன் கேட்டிருந்தேன். ஆனால் அன்று நான் கேட்டதைச் சொற்பொழிவு என்றால் போதாது; பொருட்பொழிவு-சொற்கள் மறைந்த பொருட்பொழிவு—என்றாலும் போதாது. அந்தச் சொற்பொழிவைத் தமிழ்ப்பொழிவு—தமிழ்க் காதலின் பொழிவு—என்றே கருதினேன்: பருகினேன் என்றே சொல்ல வேண்டும். பொருளிலே சொற்கள் மறைந்தன. தமிழிலே—தமிழ்க் காதலிலே—மறைந்து விட்டார் தமிழ்க்காதலர்! எனவே, அன்று நான் கண்ணினால் தமிழ்க் காதலைக் கண்டேன், கலியாணசுந்தர வடிவத்திலே. "தமிழனாய்ப் பிறந்தபயனை இன்று பெற்றோம்!" என்று இறுமாந்திருந்தேன்.

மண்ணும் விண்ணும் ஒருங்கே வறண்டு எங்கும் தண்ணீர்ப் பஞ்சமாயிருந்த காலத்திலே, ஓரிடத்தில் அருமையாக இருந்த உண்ணுநீர் கண்ட மான் கூட்டம் பட்டபாடு பட்டது இராமனைக் கண்ட மிதிலைப் பெண்குலம்—என்று கம்பர் அந்த அழகுத் தாக்த்தை எவ்வளவு அழகாக, எவ்வளவு அருமையாக வருணிக்

இருர்! எனக்கோ என் தமிழ்த்தாகத்தை வெளியிடவும் ஆற்றல் இடையாது. அந்தத் தாகம் அவ்வளவு அதிகமா யிருந்ததென்பது திரு. வி. க. அவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்ட பின்பு தான் எனக்கே தெரிந்தது.

பிறகு முதலியாரவர்களை விருதுநகரிலும் திருநெல்வேலியிலும் செட்டிமார் நாட்டிலும் சென்னையிலும் பலதடவை சந்தித்துப் பழக நேர்ந்தது. தமிழையும் ஆங்கிலத்தைப்போல் சக்தி வாய்ந்த ஒரு கருவியாகக் கையாண்டு, வாழ்க்கையின் பல துறைகளிலும் புதிய எண்ணங்களையும் லட்சியங்களையும் பரப்ப முடியும் என்ற அபிப்பிராயத்தை முதல் முதல் என் உள்ளத்தில் வேரூன்றச் செய்தவை திரு. வி. க. அவர்களின் சொற்பொழிவுகளும் கட்டுரைகளுமே. இவை, என்னைப் போன்ற எத்தனையோ தமிழர்களின் உள்ளங்களிலும் ஒரு புதிய சக்தியை விதைத்து, மொழிப் பற்று, சமயப்பற்று, நாட்டுப்பற்று என்ற முப்பொருளாகிய முழுச் செல்வத்தையும் விளைவித்துக்கொள்ள வசதி அளித்திருக்கின்றன.

தமிழுக்கும் தமிழ்நாட்டிற்கும் தமிழர்களின் சன்மார்க்க வாழ்விற்கும் திரு. வி. க. செய்திருக்கும் திருப்பணிகளை "நவசக்தி" யென்ற ஒரே வார்த்தையால் குறிக்கலாம். இத்தகைய தலைப் பெயரோடு இவர் நடத்திவந்த பத்திரிகை, தமிழ்த் தென்றலாக நடந்துவந்து தமிழர்களுக்குப் புது விருந்தாகிப் புதிய ஆரோக்கியத்தையும் ஆற்றலையும் அளித்தது. தமிழ்த் தென்றல் சில சமயங்களில் புயலாகவும் பரிணமித்து அரசியல் வானத்திலுள்ள நச்சுக்காற்றை அடித்துப் போகவும் உதவியது. எனினும் இந்தத் தமிழ்க்காற்று எவ்வளவு சமரசமாக வீசியதென்பதற்கு இதற்குக் கலியாணசுந்தரர் இட்டிருந்த "நவசக்தி" என்ற வடமொழிப் பெயரும் ஒரு நல்ல சாட்சியாகும்.

தமிழகத்தின் சமரஸ நவசக்தி திரு. முதலியார் வாயிலாக அரசியல், கலை, சமயம், சமூகச் சீர்திருத்தம், தொழிலாளர் முன்னேற்றம் முதலான பல்வேறு துறைகளில் இவரது வேட்கை, பழைய கட்மை—வேட்கையோடு கலந்த ஒரு புதிய உரிமை—வேட்கை. இவர் மார்க்கம் பழைய சித்த மார்க்கத்தோடு சேர்ந்த விடுதலை—மார்க்கம். இவர் தமிழ்க்காதலைப் புதிய சக்தியாக உருவாக்கி விட்டது. இத்தகைய உரிமை-வேட்கையோடு எழுந்த விடுதலைக் காதல்தான்.

இவர் அரசியலில் சுதந்திரம் என்ற விடுதலை தேடினார்; சாதி சமயக் கட்டுகளில் சமரஸம் என்ற விடுதலை தேடினார்; தமிழ்க் காதலினால் தமிழுக்கும் விடுதலை தேடினார், தமிழின் நவசக்தியிலே. விடுதலைக் காதலும் பக்திக் காதலும் தமிழ்க் காதலும் ஒரு 'திரிவேணி' சங்கமம்போலச் சங்கமித்து விட்டன, இப்பெரியாருள்ளத்திலே. இந்தப் புனிதமான சங்கமம் வாழ்க; கலியாண சுந்தர வடிவிலே வாழ்க, வாழ்க.

# நமது திரு. வி. க.

[சுவாமி சுத்தானந்த பாரதியார்]



ஒருதரம் பார்த்தால் மறக்க முடியாது. எத்தனை தடவை பார்த்தாலும் இன்னும் பார்க்கவேண்டும் எனத் தோன்றும். எவ்வளவு அளவளாவினாலும் பசித்தவனுக்குப் பஞ்சாமிருதம்போல் இனிக்கும். கேட்கக் கேட்கத் தெவிட்டாது. சொல்லுக்குச் சொல் புதிய கருத்துக்கள் காணும்—அத்தகைய இனிய நண்பர் திரு. வி. கலியாணசுந்தரனார்.

திரு. வி. க. ஓர் இயற்கைப் புலவர்; எதையும் ஆழ்ந்தறிந்து, உண்மையை ஊடுருவிப் பார்க்கும் ஆராய்ச்சியாளர்; பழமையின் நலத்தையும் புதுமையின் விரிந்த பயனையும் கொண்ட சீர்திருத்தக்காரர்; உள்ளொன்று புறமொன்றில்லாத உண்மையாளர்; நிகரற்ற செந்தமிழ் காவலர்; கவியுள்ளம் படைத்த பாவலர்; தம் உள்ளத்திலிருந்து பிறர் உள்ளத்திற்குப் பேசும் செஞ்சொற் புலவர்; எந்தப் பொருளையும் புதிய மெருகு கொடுத்து அழகு செய்து தமிழன்னைக்கு அணிவிக்கும் பொருட் சிற்பி; பட்டம் பதவி மாலை ஊர்வலங்களில் வேட்கை கொள்ளாமல், இயல்பாகத் தமது கடமையை நாட்டிற்காகவே செய்யும் தூய பொதுநல வீரர்; விடுதலை வேட்கை கொண்ட தேசபக்தர்; காலத்தை அஞ்சாமல் கெஞ்சாமல், தமது கருத்தைச் சொல்லும் இதழாசிரியர்; தமிழருக்குப் புதுவழி காட்டி எல்லாத் துறைகளிலும் பண்புறப் பணிசெய்த ஒப்புரவாளர்; தொழிலுலகிற்குக் கருணையுடன் தொண்டு செய்த வன்றொண்டர்; பெண்மையின் பெருமையை விளக்கி, இல்லறத்தின் பயனை வள்ளுவர்போலத் துலக்கிய சமுதாய நண்பர்; எம்மதமும் சம்மதமாய் ஒழுகும் சன்மார்க்க மணி.

இத்தகைய பெரியார் நமது தமிழ் நாட்டில் பிறந்திருப்பதே நமக்கொரு பெருமையன்றோ? தமிழர் சென்ற மூப்பதாண்டுகளாகத் திரு. வி. க. வை நன்கறிவர். அவர் சொற்கள் தமிழர் உள்ளத்தில் ஊறிக் கிடக்கின்றன. திரு. வி. க. பேச்சென்றால் தமிழர் கூட்டம் கூட்டமாக வருகின்றனர். ஆனால் தமிழர் வங்காளிகளைப் போலத் தமது பெரியார்களைப் போற்றும் நாள் வரவேண்டும். திரு. வி. க. வங்காளத்தில் பிறந்திருந்தால் இப்போது உலகப் புகழ் பெற்றிருப்பார். அவர் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும் ஐரோப்பிய மொழிகளில் உலாவும். அவரை ஓர் எமர்ஸன்போல் உலகம் மதிக்கும். போகட்டும், திரு. வி. க. வின் அறுபதாம் ஆண்டு விழாவை யாவது தமிழர் எழுந்துநின்று கொண்டாடுகிறார்கள்; அம்மட்டில் தமிழன்னை செய்த தவப்பயனே. இதில் திரு. வி. க. வின் வரலாற்றுச் சுருக்கமும், அவர் புலமையும், பொதுநலத் தொண்டின் பான்மையும் திட்பநுட்பமாகச் சொல்லப்படும்.

## கதிரைவேற் பிள்ளையுடன் தொடர்பு

தமிழிலேயே ஊறித் தமிழுக்கே வாழ்ந்த பெரியாருள் யாழ்ப்பாணம் கதிரைவேற் பிள்ளை ஒருவர். இவர் கூன்மடை திறந்தது போலும், குற்றாலம் அருவிபோலும், சண்டமாருதம் போலும் சொற்பொழியும் பெருநாவலர். இவர் தமிழுக்கும் சைவத்திற்கும் அரும்பணி புரிந்த பெரியார்; ஆறுமுக

நாவலரின் அருமை மாணவரின் மாணவர். மதுரையில் தமிழ்ச் சங்கம் நாட்டிய பாண்டித்துரைத் தேவருக்கு அரிய துணை செய்தவர். அனைத்தையும்விட நமக்கு ஒழுங்கான தமிழகராதி தந்தவர் இவரே. இவர் சுமார் 40 ஆண்டுகட்கு முன்னர், சென்னை வெஸ்லி கல்லூரியில் ஒரு கணக்காயரா யிருந்தார். மாணவரும் இளந்தமிழரும் அவர் சொற்களில் ஈடுபட்டு அவரைக் காந்தம்போலப் பின்பற்றினர். இரவியைச் சுற்றிக் கதிர் வீசுவது போல் கதிர்வேலைச் சுற்றித் தமிழ்க்கதிர் வீசிக்கொண்டிருக்கும். இக்கதிரில் குளித்தவரும் தமிழ்க்கதிராவர்.

அக்கதிர்களில் ஒருவரே **கலியாணசுந்தரனார்.** அவர் வெஸ்லி கல்லூரியில் ஐந்தாம் பாரத்தைத் தாண்டிக்கொண் டிருந்தார். கணக்கில் புலி; தமிழில் சொல்லவேண்டுவதில்லை. பள்ளிப் பரீட்சைகளில் முதற்பரிசு பெறறுத் தேர்ந்து மேல் வருப்புக்குச் செல்வார். இம்மாணவ மணி புத்த கப்படிப்புடன் நிற்கவில்லை. அவர் தமிழை முறையாகப் பயின்றார்; பெரியார் உறவை நாடினர்; நல்ல சொற்பொழி வென்றால் பள்ளிக்கூடத் தையும் மறந்து ஓடினர்.

ஆசிரியர் கதிரைவேற் பிள்ளையின் சொற்பொழிவு கலியாணசுந்தர ரைக் கவர்ந்துவிட்டது. அக்காலத்தில் மதவாதம் அதிகம். மேடையும் திண்ணையும் தெருவும் போர்க்களமாயின. நமது கதிரைவேற் பிள்ளை தளகர்த்தராக விளங்கி மேடையதிரச் சொல்லம்புகளை வீசினர். அவர் பேச்சின் வேகம் தமிழகத்தில் பெரிய கிளர்ச்சியை உண்டாக்கியது.

நமது கலியாணசுந்தரம் கதிரைவேற் பிள்ளை சொன்மாரியில் இன்ப நீராடிக் களித்தார். அவர் போலவே இவரும் சொற்பொழி வாற்றினர். ஆனல் ஒன்று; நமது கலியாணசுந்தரம் சமரச சன்மார்க்கர் என்பதைத் தமிழர் நினைக. கதிரைவேற் பிள்ளையிடமிருந்து அந்தச் சொல்லருவி இவர் உளத்தில் பாய்ந்தது. திரு. வி. க. வின் மாசற்ற இளந்தமிழில் யாழ்ப் பாணப் பண்பு ஒலிப்பதைக் காணலாம்.

கலியாணசுந்தரம் கதிரைவேற் பிள்ளையுடன் திரிவது பள்ளியாசிரியர் பலர்க்குப் பிடிக்கவில்லை. அவருடன் சேரக்கூடாது என்று அவர்கள் எச்சரிக்கை செய்தனர். பயனில்லை. கலியாணசுந்தரனார் கோர்ட்டில் நடந்த அருட்பா மருட்பா வழக்கைப் பார்க்கத் தவறாமல் சென்று வந்தார். பள்ளிப்படிப்புப் பாழாயிற்று. மெற்றிகுலேஷன் சோதனைக்குச் செல்ல வில்லை. தமிழிலே கருத்தூன்றினர். ஆனல் திரு. வி. க. ஆங்கில மொழியை வெறுக்கவில்லை. அவர் ஆங்கிலத்திலும் அரிய நூல்களைப் படித்திருக்கிறார். ஆங்கில உலகில் நிகழும் புதிய ஆராய்ச்சிகளை அவர் கற்றறிந்தவர்.

### கணக்கரானர்

திரு. வி. க. புக் கீப்பிங் பரீட்சையில் தேறினர். ஒரு கம்பெனியில் கணக்கரானர். இவரது வேலையில் அப்பழுக்குக் கிடையாது. கம்பெனி துரைமார் இவர் திறமையை மெச்சினர்.

1908-ம் ஆண்டு, நமது நாட்டில் சுதேசி இயக்கம் சூறாவளியாகக் கிளர்ந்தெழுந்தது. கர்ஸானின் வங்கப் பிரிவினைச் சட்டம் நாட்டை ஒற்று மைப்படுத்தித் தட்டி எழுப்பியது. வந்தேமாதரக் கோஷத்துடன் வங்காளி கள் கங்கைக்கரையில் கங்கணம் கட்டிக்கொண்டு செய்த சுதேச சுதந்திர

விரதம் நாடெங்கும் பரவியது. பின் சந்திரபாலர், ரவீந்தரநாத் தாகூர், சுரேந்திரநாத் பானர்ஜி, தாதாபாய் நாரோஜி, லாலா லஜபதிராய் முதலிய தேசாபிமானிகள் ஆங்காங்கெழுந்து நாட்டில் சுதந்திர தாகத்தை உண்டாக்கினார்கள். இவர்களுக்கெல்லாம் தலைமை வகித்துச் சுதேச இயக்கத்திற்கு ஒரு நிலையான உருவும் திருவும் வேகமும் அளித்த வீரர் பாலகங்காதர திலகரே, அவருக்கு வலக்கரம்போலும் மூளைபோலும் உதவியவர் மகான் ஸ்ரீ அரவிந்தர். அவரது வரம்பெற்ற எழுத்து வன்மையால் அவர் ஆசிரியராயிருந்து நடத்திவந்த 'வந்தேமாதரம்' பத்திரிகை முனைமுதல் மலைவரையில் புதிய விழிப்பை உண்டாக்கியது.

அக்காலம் வந்தேமாதரத்தை வரவழைத்து முறையாகப் படித்து வந்தவருள் நமது கம்பெனி கணக்கரும் ஒருவர். இவர் படிப்பதுடன் நிற்பதில்லை. கம்பெனித் தொழிலாளரைக் கூட்டி வந்தேமாதரத்தின் கருத்தை அவர்களுக்கு விளக்கப் புகுந்தார். இவரால் தொழிலாளருக்கு நாட்டன்பு வளர்ந்தது. அச்சமயம் இங்கிலாந்தில் தொழிற் கட்சித் தலைவராகி ஏழைகளுக்கு அரிய பணி செய்த கீர் ஹார்டி நமது நாட்டிற்கு வந்தார். கலியாணசுந்தரனாருக்கு அவரது காட்சி கிடைத்தது. அதிலிருந்து அவர் மனம் தேச பக்தியிலும் தொழிலாளர் தொண்டிலும் சென்றது.

## வேலையை உதறித் தள்ளினார்

திரு. வி. க. உண்மையென உணர்ந்த வழியில் அஞ்சாது செல்பவர். இவர் வந்தேமாதரம் படிப்பதும், நாட்டுப் பேச்சுப் பேசுவதும் தொழிலாளரை ஊக்குவதும் கம்பெனியார்க்குப் பிடிக்கவில்லை. வந்தேமாதரம் என்றாலே கிலிபிடிக்கும் காலம் அது. அதிலும் வெள்ளைத் துரைமாரிடம் வேலை பார்க்கும் ஒருவர் வந்தேமாதரப் பிரசாரம் செய்ய எவ்வளவோ துணிவு வேண்டும். அந்தத் துணிவைப் பணிய வைக்க, கம்பெனித் தலைவர் முயன்றார். "வந்தேமாதரத்தை விடு : இன்றேல் வேலையை விடு" இதுவே கேள்வி. மனச்சாட்சி "நீ அடிமை வேலைக்குப் பிறந்தவனல்லை. உன்னைத் தமிழ்த் தாயும் பாரத மாதாவும் அழைக்கின்றனர், போ" என்று உந்தித் தள்ளியது. உடனே திரு. வி. க. கம்பெனி வேலையை உதறித் தள்ளினார். காந்தியடிகள் பிற்காலம் சொன்ன உத்தியோக பகிஷ்காரத்தைத் திரு. வி. க. முன்பே செய்து காட்டிவிட்டார். பிழைக்க ஆதரவளிக்கும் வேலையை இப்படி ஒரு பத்திரிகைக்காக உதறித் தள்ள எவ்வளவோ நெஞ்சுரம் வேண்டும்?

## தமிழ்த் தொண்டு

திரு. வி. க. திருவல்லிக்கேணியில் பெரிய புராணம் படித்து விரிவுரை நிகழ்த்திவந்தார். தூய சைவ வொழுக்கத்தை நடத்திக் காட்டினார். தேவார திருவாசகங்களின் அருமை பெருமைகளை விளக்கினார். பழந் தமிழர் நாகரிகத்தை ஆர்வமுடன் பரப்பினார். அக்காலமே அவர் பெரிய புராணத்திற்குக் குறிப்புரைகள் எழுதி வந்தார். இச்சமயந் தான் ஒரு புலவர் மூலம் திரு. வி. க. வைப் பற்றி எனக்கும் தெரிந்தது. அவரது சொல் நயத்தை வியவாதவரில்லை.

சென்னை ஆயிரம் விளக்கிற்கருகே ஒரு வெஸ்லியன் மிஷன் பள்ளிக்கூடம் இருந்தது. அதிற் பெரும்பாலும் தொழிலாளரும் இருக்குலத்தாரும் படித்தனர். திரு. வி. க. இவர்கள் நண்பர். அந்தப் பள்ளிக்கூடத்தில்

அவர் ஆசிரியரானார். அவ்வேளையில் திரு. வி. க. முதலியாருக்கு மணமானது. அன்பும் அறமும் விளங்க இல்லறம் நடத்தினார். பெண்மையின் பெருமையை விளக்கும் ஆண்மையுடன் மனை வாழ்க்கை வாழ்ந்தார். பின்னே வெஸ்லி கல்லூரியில் தலைமைத் தமிழ்ப் பண்டிதரானார். உண்மையான தமிழுணர்ச்சியுடன் மாணவருக்கு உருக்கமாகப் பாடம் சொன்னார். மாணவர் இவரிடம் பெரு மதிப்பு கொண்டனர். இவர் வகுப்பு மிகவும் ஒழுங்காகவும் வசீகரமாகவும் இருந்தது. 1917-ம் ஆண்டு நவம்பர் வரை திரு. வி. க. தமிழ்ப் பண்டிதரா யிருந்தார்.

## மணி ஐயர் அழைப்பு

இக்காலமே பெசண்டம்மையாரின் சுயாட்சிக் கிளர்ச்சி நாடெங்கும் எழுந்தது. நாடெங்கும் ஓம்ரூல் சங்கங்கள் ஏற்பட்டன. பெசண்டம்மையின் 'நியூ இந்தியா' வீட்டுக்கு வீடு நாட்டுணர்வை ஊட்டியது. அன்னி பெசண்டு, அருண்டேல், வாடியா, ஸி. பி. இராமசாமி ஐயர், ஸர். எஸ். மணி ஐயர் ஆகியோர் சுயாட்சிக் கிளர்ச்சியில் தீவிரமாக ஈடுபட்டனர். அதன் பயனாகவே மாண்டேகு இந்தியாவிற்கு வந்தார். அதனால் இரட்டையாட்சி நமக்குக் கிடைத்தது. இந்தக் கிளர்ச்சியில் ஈடுபட்டவருள் சுப்பராய காமத் ஒருவர். அவர் திரு. வி. க. வின் தமிழ்ப் பேச்சில் ஈடுபட்டவர். வகுப்பு நாற்காலியினின்று பொது மேடைக்குத் திரு. வி. க. வை இழுத்தவர் இவரே. மாணவருக்குப் போதித்த திரு. வி. க. நாட்டிற்குப் போதிக்கத் தொடங்கினார். தமிழ்த் தாயின் பணி செய்த திரு. வி. க. இனிப் பாரத மாதா பணிக்கே எழுந்தார். மனைவியும் இறந்த பிறகு, திரு. வி. க. மனத் துறவுடன் பொது நலத்தையே விரும்பி வாழ்ந்தார்.

1917-ம் ஆண்டு அன்னி பெசண்டு சிறையுண்டார். அச்சமயம் மணி ஐயர் அமெரிக்கத் தலைவர் வில்ஸனுக்கு நீண்ட கடிதம் எழுதி இந்திய நிலைமையை விளக்கினார். கோகலே மண்டபத்தில் ஒரு பெரிய கூட்டம் நடந்தது. திரு. வி. க. பேசினார். நமது புலவர் தமது மணிக் குரலை எழுப்பிச் சுய ஆட்சியின் தத்துவத்தையும், நாட்டு நிலைமையையும், பெசண்டம்மையின் பெருமைகளையும் உருக்கமாகப் பேசினார். கூட்டம் அவர் பேச்சில் கட்டுண்டு உணர்ச்சி ததும்பி உள்ளம் பொங்கி நின்றது. ஸர். எஸ். சுப்பிரமணி ஐயர் சிலரைத் தமது மாளிகைக்கு அழைத்தார். அவருள் திரு. வி. க. வும் ஒருவர். கூட்டம் முடிந்த பின்னர் மணி ஐயர் திரு. வி. க. வை அழைத்து, தேவாரத்தைப் பற்றியும், திருக்கோவையாரைப் பற்றியும் பேசிக் கொடுத்து, முடிவில் "கோகலே மண்டபப் பேச்சு நன்றாயிருந்தது. தாங்கள் தேச பக்தியைப் புகட்டினால் நாட்டிற்குப் பெரும் பயனுண்டு. தேசம் தங்களைப்போன்ற சொற் கொண்டல்களை அழைக்கிறது" என்று கூறினார். அன்றுமுதல் அடிக்கடி பொதுக் கூட்டங்களில் திரு. வி. க. வின் சொற்பொழிவுகள் நடந்தன. வாழ்வின் உண்மைப்பணி புலப்பட்டது.

5-12-1917 திரு. வி. க. தமிழாசிரியர் வேலையை விட்டார். இந்தியாவின் உண்மையான வாழ்க்கை இனித்தான் தொடங்குகிறது. தமிழாசிரியர் வேலையை விட்டதும் திரு. வி. க. 'தேச பக்தன்' பத்திராசிரியர் வேலையில் (7-12-1917) அமர்ந்தார். பொருத்தமான வேலை!

## தேச பக்தன் ஆசிரியப் பதவி

ஸ்ரீ அரவிந்தர் வந்தேமாதரம் மூலம் இந்தியாவில் செய்த வேலையைத் திரு. வி. க. 'தேசபக்தன்' மூலம் தமிழகத்திற் செய்தார். ஆஹா! அது

என்ன இனிய தமிழ்! ஒவ்வொரு சொல்லினும் எவ்வளவு அரிய பொருள்! 'தேசபக்த'னைப் படிப்பதே ஒரு தனியின்பம். அது பொது ஜனங்களுக்குக் கல்வி யளித்தது, தூய தமிழுணர்ச்சி யளித்தது: தமிழார்வம் தூண்டியது; அசல் ஆங்கிலப் பத்திரிகை போன்று தமிழிலும் உயர்ந்த முறையில் பத்திரிகை நடத்தலாம் என்பதை விளக்கியது. தமிழுணர்ச்சி பெற்ற தமிழ் இதழை முதன்முதல் தமிழருக்குத் தந்தவர் நமது திரு. வி க. தாம். அவர் தமிழே இப்போது பல பத்திரிகைகளில் எதிரொலிக்கிறது. முதன்மையாக அப்பர், மாணிக்கவாசகர், வள்ளலார் வாக்குகளினும், சேக்கிழார் வாக்கினும் பொதிந்த பொதுநல உண்மைகளையும் சன்மார்க்க மணிகளையும் எடுத்தெடுத்து நமக்களித்தவர் திரு. வி. காவே.

லக்னோ காங்கிரஸில் மித-அமித வாதிகளுக்குச் சமரசம் ஏற்பட்டது. திலகர் மீண்டும் செல்வாக்குப் பெற்றார். அவர் சிமைக்குச் சென்று சுயாட்சியின் பிரசாரம் செய்ய முன் வந்தார். அக்காலம் அவர் தென்னாட்டிற்கு வந்தார். சென்னையில் காமத் வீட்டில் தங்கினார். திரு. வி. க. திலகரைக் கண்டார்: திலகர் கொள்கைகளைத் திரு. வி. க. தமது மணிக்குரலால் பொது ஜனங்களுக்கு விளக்கினார்.

## காந்தீயம்

திலகர் இருக்கும்போதே மஹாத்மாவின் ஒத்துழையாமை தொடங்கிவிட்டது. திலகர் தமது பணியை மஹாத்மாவிடம் கொடுத்துப் பாரதமாதா திருவடியிற் கலந்தார். நாட்டு நிகழ்ச்சிகளில் தீவிரக் கனல் பறந்தது. திரு. வி. க. சென்னையில் காந்தியடிகளைக் கண்டார். அதே சமயம் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார், டாக்டர் ராஜன், முதலியோரும் காந்தியடிகள் இயக்கத்தில் ஈடுபட்டனர். காந்தியடிகளின் பரிசுத்த வாழ்வும், சொல்லும் செயலும் பொருந்திய நேர்மையும், மதிப்பொலிவும், ஒப்பற்ற தியாகமும் திரு. வி. க. வைக் கவர்ந்தன. திரு. வி. கலியாணசுந்தரனார் தமிழ் நாட்டில் காந்தியடிகள் கொள்கைகளைப் பரப்பத் தொடங்கினார். அக்காலம் இவர் சொற்பொழிவுகளுக்கு ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடுவார்கள். "கலியாணசுந்தர முதலியார் தமிழ்" என்றால் அதற்குத் தனிப் பெருமையுண்டு. நல்ல தமிழ் பேசுகிறவர்களைத் "திரு. வி. க. மாதிரி பேசுகிறார்" என்பர். டாக்டர் வரதராஜுலு, ஈ. வே. ராமசாமி நாயக்கர், திரு. வி. க. இம் மூவருமே அக்காலம் தமிழ்நாடு பெருமதிப்புடன் போற்றிய முத்தலைவர். தமிழருக்குக் **காந்தீயம்** என்ற மதத்தைப் புகட்டியவர் திரு. வி. க. தாம். மஹாத்மாவின் அருமை பெருமைகளைத் தமிழருக்கு இவரே நன்றாக விளக்கினார். தென்னிந்தியாவில் ஒத்துழையாமை அவ்வளவு வெற்றி பெற்றதற்குத் திரு. வி. க. வின் எழுத்தும் பேச்சுமே முதன்மையான காரணங்களாம். "நாமார்க்குங் குடியல்லோம்: நமனை யஞ்சோம்" என்று ஒவ்வொரு தமிழனும் உணரச் செய்த வீரர் திரு. வி. க. அக்காலம் அவர் எழுதிய "**மனிதவாழ்க்கையும் காந்தியடிகளும்**" என்ற நூல் தமிழருக்குக் காந்திய வேதமாக விளங்கியது. அதைப் படியாத தமிழனில்லை. அந்நூலில் அப்பருக்கும் காந்திக்கும் உள்ள ஒற்றுமைகளை விளக்கித் திரு. வி. க. தமிழருக்குப் பெருமை தந்தார். அந்நூல் வங்காளத்தில் எழுதப்பெற்றிருந்தால், இதற்குள் உலகெல்லாம் பரவி யிருக்கும். ரோமேன் ரோலாந்தின் காந்தியநூலை வியக்கும் உலகம், திரு. வி. க. வின் நூலை ஆங்கிலத்தில் பெயர்த்தால் இதையே மெச்சும். திரு. வி. க. வின் தமிழ் அவ்வளவு மாசற்ற உணர்ச்சியைத் தரும்.

அக்காலம் திரு. வி. க. ஒரு தட்டாடை, கதர்ஜிப்பா, ஒரு துண்டு, உச்சிக்குடுமி, முகமெல்லாம் புன்னகை இவற்றுடன் விளங்கினர். எளியநடை, இனிய பேச்சு, அன்பான நட்புறவு, அஞ்சா நெஞ்சம், ஆட்களின் உள்ளத்தை ஊடுருவியறியும் கூர்விழிகள் இவை திரு. வி. க. வின் சிறப்புகள்.

## நவசக்தி தோற்றம்

சில காரணம் பற்றித் திரு. வி. க. தேசபக்தனை விட்டுவிட்டார். அச்சமயம் புதுவையிலிருந்து வீரமணி வ. வெ. சு. ஐயரும் சென்னைக்கு வந்தால், 'தேசபக்தன்' அவர் தலைமையில் நடந்தது. திரு. வி. க. இதற்குள் தமிழர் உள்ளத்தில் நிலையான இடம் பெற்றுவிட்டார். திரு. வி. க. சாது அச்சகம் நிலைநாட்டி 'நவசக்தி' என்ற வார இதழைத் தொடங்கினர். மீண்டும் தமிழகம் சுந்தரத் தமிழைப் பருகி மகிழ்ந்தது. 'நவசக்தி'க்குத் தொழிலாளரிடையே ஏராளமான செல்வாக்கிருந்தது. 'நவசக்தி'யில் வந்த திரு. வி. க. கட்டுரைகளும் தலையங்கங்களும் சிறந்த தமிழ் விருந்தாகும். அக்காலமே சென்னையில் பக்கிங்காம் தொழிலாளர் வேலை நிறுத்தம் அமளியாக நடந்தது. அப்பெரிய வேலை நிறுத்தத்தை நடத்தி முதலாளி-தொழிலாளி தகராரைத் தீர்த்து வைத்தவர் நமது திரு. வி. க. அக்காலம் இவர் உடல் நலத்தைக் கூடக் கவனியாமல் தொழிலாளர் பணியில் ஈடுபட்டார். இவர் சொல்லே தொழிலாளர் வேதமா யிருந்தது.

ஒத்துழையாமை நின்றது. சித்தரஞ்ஜன தாஸர், மோதிலால் நேரு, நமது எஸ். ஸ்ரீநிவாசய்யங்கார் இம்மூவரும் ஸ்வராஜ்யக் கட்சி தொடங்கினர். நாடு இரண்டானது. சட்டசபை அமளி வலுத்தது. காந்திய பக்தர் கதர்ப்பணி செய்துகொண்டு அடக்கமா யிருந்தனர். திரு. வி. க. எஸ். ஸ்ரீநிவாச ஐயங்காருக்கு வலது கைபோல் உதவினர். அக்காலத்தில் இவருக்கு அசாத்ய மதிப்பிருந்தது. திரு. வி. க. தான் தமிழ் நாடாயிருந்தது.

வந்தது காஞ்சிபுரம் மகாநாடு! தமிழரெல்லாரும் திரு. வி. க. வையே அம் மாநாட்டுத் தலைவராக்கித் தமது மரியாதையைத் தெரிவித்தனர்.

## காஞ்சியில்

வடநாட்டில் சூரத் வேலையைத் தென்னாட்டில் காஞ்சியும் செய்ய நடித்தது. தலைவரை யாரும் எதிர்க்கவில்லை. அதற்குப் பதிலாக வகுப்புப் பிரச்சினை வந்து புகுந்தது. வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்திற்குச் சண்டைபோடவே கச்சைகட்டி நரைத்த மீசையை முறுக்கிவிட்டு மூக்குக் கண்ணாடியைத் துடைத்துக்கொண்டு தலை நிமிர்ந்து வீறுப்புடன் வந்தார் நமது **இராமசாமி நாயக்கர்**. எஸ். இராமநாதன் அவருக்கு வலது கையா யிருந்தார். வகுப்புவாதத் தீர்மானத்தைத் தலைவர் திரு. வி. க. தள்ளிவிட்டனர். மகாநாட்டில் பெருங்குழப்பம். திரு. வி. க. மிகவும் திறமையாகச் சமாளித்து மகாநாட்டை வெற்றிபெறச் செய்தார்; அவருக்கு வகுப்புவாதம் சுத்தமாகப் பிடிக்காது. அவர் சமரஸ சன்மார்க்கர்; காந்தியத்தின் தத்துவத்தை அறிந்தவர்.

காஞ்சிபுரம் காங்கிரஸ் மகாநாட்டில் எத்தனையோ பேச்சுக்கள்; கூச்சல்கள்; நிகழ்ச்சிகள் நடந்தன. எத்தனையோ தலைவர்கள் வந்தார்கள். என் உள்ளத்தைக் கவர்ந்த தலைவர் ஒருவரே. அவரே திரு. வி. கலியாண சுந்தர முதலியார். அவரைத் தலைமை பீடத்தில் அமர்த்திய எஸ். ஸ்ரீநிவாச ஐயங்கார், "திரு. வி. க. இயற்கையிலேயே பழுத்த மேதாவி. அரசியல் உணர்ச்சி (பொலிடிகல் ஸென்ஸ்) மிகவுடையார். தேசத்திற்கே தம்மைத் தந்த "தியாகி" என்றார். அது பொருந்தும்.

திரு. வி. க. வின் தலைமையுரை நாட்டிற்கு அரிய புதிய வழி காட்டியது. தலைமையுரைதான் என் மனத்தில் இன்றும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. காஞ்சி மாநாட்டிற்குப் பிறகு இராமசாமி நாயக்கர் தமது 'குடியரசில்' எழுதி வந்ததையும் செய்ததையும் நாடறியும். டாக்டர் வரதராசுலு நாயுடுவும் ஒத்துழையாமை சாத்தியமில்லை என்று கைவிட்டார். திரு. வி. க. ஒருவரே ராஜாஜியுடன் காந்தீயத்திற்கு ஆக்கந் தேடினர். அதனால் அவருக்கு வந்த வசவும் திட்டும் கொஞ்சமல்ல.

காஞ்சி மகா நாட்டிற்குப் பிறகு ஸ்ரீநிவாச ஐயங்காருக்குத் துணை செய்த திரு. வி. க. ஒரு நாள் அவருக்கு ஓர் அறிக்கை அனுப்பினர். பிறகு "சும்மா யிருப்பதே சுகம்" என்றொரு தலையங்கம் 'நவசக்தி'யில் வந்தது. அன்றுமுதல் இவர் காங்கிரஸ் பக்கம் போனதில்லை.

அக்காலம் ஜஸ்டிஸ் கட்சி செல்வாக்குப் பெற்றது. அதன் ஆட்டத்தை அடக்கிவைத்தவருள் திரு. வி. க. ஒருவர்.

அவர் காலங் கருதியே சும்மா இருந்தார். 1930-ம் ஆண்டு இரண்டாவது உப்புச் சத்தியாக்கிரகம் எழுந்தது. வடக்கே காந்தியடிகள் தொண்டருடன் தண்டி யாத்திரை சென்றார். தெற்கே ராஜாஜி வேதாரண்யத்தில் சத்தியாக்கிரகம் செய்தார். திரு. வி. க. வின் கையெழுத்தை மட்டும் ராஜாஜி பெற்றுச் சென்றார்.

## இலக்கியப் பணி

திரு. வி. க. வின் மனைவியும் மரணமடைந்தார்; குழந்தைகளும் மரணமடைந்தன. அண்ணல் உலகநாத முதலியாரே அவர் உடல் தேவைகளைக் கவனித்து வருகிறார். திரு. வி. க. துறவிபோல் எதிலும் பற்றின்றி எழுதுகோலுடன் வாழ்கிறார். அவரை இன்னும் தமிழர் பயன் படுத்திக்கொள்ள இடமுண்டு.

திரு. வி. க. அறுபதாம் ஆண்டைத் தமிழர், சிறப்பாகக் கொண்டாடுவது பற்றி யாரே மகிழார்? அவர் பெயரால் நூலகங்களும், சன்மார்க்க சபைகளும் ஏற்பட்டுத் தமிழும் சமரச உணர்ச்சியும் பரவினால் மணிவிழா சிறந்த தொண்டு செய்ததாகும். தமிழறிவு, சன்மார்க்க வாழ்வு, சைவ உணவு, நாட்டன்பு, நிறைமுறையான இல்லற ஒழுக்கம் இவ்வைந்தும் திரு. வி. க. வுக்குப் பிரியமானவை. இவற்றைத் தமிழர் போற்றுக.

# சிம்மராசி

(சீ பி)

**வா**ன வீதியின் பன்னிரு பாகங்களான ராசிகளுள் 'அரிமனே' அல்லது 'சிம்மராசி'யும் ஒன்று. அது ராசிகளின் வரிசையில் ஐந்தாவதாக இடம் பெற்றுள்ளது; இயற்றழற் கோளமான சூரியனுடைய ஆட்சி வீடு அது. ஆகஸ்டு செப்டெம்பரில் வரும் ஆவணி மாதம் முழுவதும் அந்த ராசியில் சூரியன் ஸஞ்சரித்து வரும். அதுவேளை பிறந்தவர்கள் அரிமனேயினர்—சிம்மராசியோர் (Leo People) எனப் பெறுவர்.

சூரியனுடைய கிரணம் செல்லாத இடம் உண்டா? இல்லை. அதுபோல, இந்த ராசியோருக்கு எல்லாக் கலைகளிலும்—துறைகள் யாவினும் தக்க பிரக்ஞை இருக்கும். முன் அனுபவமேதுவுமில்லாமலே புதிய துறைகளில் எதையும் மிக அநாயாஸமாகக் கையாளுந் திறமை இவர்களுக்கு உண்டு. இதற்கு இவர்களிடமுள்ள உள்முக திருஷ்டியும்—தீர்க்க தரிசனமும் பெரிதும் துணை செய்கின்றன. புத்தி பாகத் திறமைகள் அபூர்வங்கள் பலவற்றைக் காணுந்தன்மை வாய்ந்தவை. சாமான்ய வாழ்க்கையும்—உயர் திரு நோக்கும் கொண்டவர்கள். அதற்காக எத்தகைய தியாகத்திற்கும் தயாராக விருப்பவர்கள்.

ஆனல், சூரியனது ஒளி எவ்விதம் சமதிருஷ்டியுடன்—எத்தகைய பேதங்களையும் கருதாது எங்கும் வீசுகிறதோ, அவ்விதமே இவர்களுடைய இதய நலன் விரிந்த நோக்குடன் சமதர்மத்தைக் கோரி நிற்கும். சூரியன் இடையீடின்றி ஒளி பெருக்கி வருவதே போல எக்காலும் இவர்களுக்கு சேவை இருந்து வரும்.

இந்தப் பலன்கள் யாவும் பொது. ஒருவருடைய ஜாதகத்தில் வரும் பாவங்களும்—அவற்றின் அதிபர்களும்-அவர்களுடைய பல புஷ்டியும் கொண்டு இப் பலன்கள் மிகு உயர்வாகவும்—சாமான்யமாகவும் இருக்கும்.

அறிஞர், திரு. வி. க. ஒரு லீயோ புருஷர். அவரைத் தமிழ் நாடு நன்கறியும். மொழி—சமயம்—அரசியல் ஆகிய துறைகள் அனைத்திலும் அவருடைய அரிய சேவை இருந்து வந்திருக்கிறது. பொதுநலங் கோரிப் பணி ஆற்றிய—ஆற்றி வருகிற எல்லோரினும் இவர் தனிச் சிறப்புக்கு உரியவர். உயர்ந்த லட்சியங்களையுடைய இவருக்கு 'ஸமரஸமே' ஜீவனுகும். இதனல் தான் இவர் எல்லோருடைய பற்றுள்ளத்தையும் கொள்ளை கொண்டிருக்கிருர். பெண்ணின் பெருமையையும்—உழைப்பின் மேன்மையையும் உள்ளவாறு கண்ட பெருந்தகை. புலமை மிக்க இந்நாவலர் பல நூற்களின் பேராசிரியர்; முதற்பெரு நூற்களின் விரிவுரையாளர். ஆராய்ச்சிக் கண்ணேடு அவர் தரும் விளக்கங்கள் தாகமுடையவர்களுக்கு தக்க ஒரு சமய சஞ்சிவி. மொத்தத்தில் அவர் சொல்லும்-எழுத்தும் உயிருள்ளவை; ஜீவன் நிறைந்த இலக்கியங்கள்

அருள் நிறைந்த இலக்கியங்கள். அருள் நிறைந்த அவருடைய பேருள்ளத்தில் எவருக்கும் இடமுண்டு.

இத்தகைய புனிதர் முன்னைய (கடந்த பரிவர்த்தி) சுபானு வருஷம்—ஆவணித்திங்கள்-12-ம் நாள் (1883-ம்வரு ஆகஸ்ட்மீ 26வ) இரவு மணி 10 நிமிஷம் 30 செக்கன்ட் 40-க்குப் பிறந்தார். அதுகால் இருந்த கிரகநிலைகளை இராசி குண்டலீயில் தந்திருக்கிறது. பலன் நிச்சயங்களுக்கு முக்கியமான 'பாவகுண்டலீ'யும் அதை அடுத்து அறிஞர்களுடைய கவனத்திற்காக இடம் பெறுகிறது.

| | | | |
|---|---|---|---|
| | கேது | லக் சனி சந் | |
| | இராசி குண்டலீ | | குரு |
| அங்காரகன் | | | சூர் சுக்ரன் |
| | | ராகு | புதன் |

| | | | |
|---|---|---|---|
| (12) கேது | (1) நெப்டியூன் | (2) சனி சந் | (3) குரு |
| (11) | பாவ குண்டலீ | | (4) சுக்ரன் |
| (10) அங்காரகன் | | | (5) சூர்ய புதன் |
| (9) | (8) | (7) | (6) யுரேன ராகு |

பாவ ஸ்புடம்

| பாவங்கள் | ஆரம்பம் | | மத்யம் | | முடிவு | |
|---|---|---|---|---|---|---|
| | பா | கலை | பா | கலை | பா | கலை |
| 1-ம் பாவ | 15 | 33.5 | 31 | 54 | 45 | 38.5 |
| 2-ம் ,, | 45 | 38.5 | 59 | 23 | 73 | 07 |
| 3-ம் ,, | 73 | 07 | 86 | 51 | 100 | 35.5 |
| 4-ம் ,, | 100 | 35.5 | 114 | 20 | 130 | 35.5 |
| 5-ம் ,, | 130 | 35.5 | 146 | 51 | 163 | 07 |
| 6-ம் ,, | 163 | 07 | 179 | 23 | 195 | 38.5 |
| 7-ம் ,, | 195 | 38.5 | 211 | 54 | 226 | 08.5 |
| 8-ம் ,, | 226 | 08.5 | 239 | 23 | 254 | 07 |
| 9-ம் ,, | 254 | 07 | 266 | 51 | 281 | 05.5 |
| 10-ம் ,, | 281 | 05.5 | 294 | 20 | 310 | 35.5 |
| 11-ம் ,, | 310 | 35.5 | 326 | 51 | 343 | 07 |
| 12-ம் ,, | 343 | 07 | 359 | 23 | 15 | 33.5 |

கிரக ஸ்புடங்கள்

| கிரகங்கள் | பாகை | கலை |
|---|---|---|
| சூர்யன் | 132 | 52 |
| சந்திரன் | 59 | 03 |
| அங்காரன் | 283 | 03 |
| புதன் | 150 | 29 |
| குரு | 93 | 06 |
| சுக்ரன் | 123 | 57 |
| சனி | 47 | 26 |
| ராகு | 193 | 19 |
| கேது | 13 | 19 |
| யுரேனஸ் | 187 | 34 |
| நெப்டியூன் | 30 | 43 |

உதய பாவத்தில் 'நெப்டியூன்' அதன் மத்திய பாகையை அடுத்து ஆரோகணமாய் எழுந்து கொண்டிருக்கிறது. அதுவே உதயக் கிரகம் (Ri ing Planet) ஆகையால் ஜாதகத்தின் பலன்கள் முழு

வதையும் ஆளும் கிரக (Ruling Planet) மாகிறது. உதய பாவன் சுக்ரன் க்ஷேத்திர பாவத்தில் (நான்கா மிடத்தில், கேந்திர வலுப் பெற்று, லட்சிய பாவனை (ஏழாமாதிபதி) அங்காரகனுடைய பார்வையில் இருக்கிறது.

தர்ம-கர்மன் (ஒன்பது-பத்து பாவாதிபன்) சனி, சௌர்யாதிபதி (மூன்ருமதிபதி) சந்திரனுடன் தன பாவத்திலும், க்ஷேத்திர பாவன் (நான்காம் பாவன்) சூர்யன் இதய பாவன் (ஐந்தாம் பாவன்) புதனுடன் பஞ்சம திரிகோணத்திலும், லட்சியபாவன் (ஏழாமாதிபன்) அங்காரகன் இராஜ்ய பாவத்திலும் (பத்தா மிடத்திலும்) இடம் பெற்றுள்ளன.

சந்திரன்-அங்காரகன்-புதன்-குரு இந் நால்வரும் உச்சமே. இவர்களில் புதன்-குரு இவர்களுக்கு முறையே மூலத் திரிகோண-உச்ச பலங்கள் இருக்கின்றன. சந்திரன் பாவ மத்யத்தை அடுத்துச் செல்லும் ஆரோகணமாயினும், இராசி அந்தத்தில் இருக்கின்றது.

குருவின் அருள் அங்காரகனுக்கும், அங்காரகன் விழி சுக்ர-சூர்யருக்கும், சனியின் பார்வை லாபத்தலத்திற்கும் கிடைத்திருக்கின்றது.

இவ்வித பலங்களில் ஜெனன காலத்தில் அங்காரக திசையில் தொடங்கி, தன-பஞ்சமாதிபதி புதனுடைய திசை இதுகால் நிகழுகின்றது. இதில் தனது புக்தி 1943-ம்ளு ஆகஸ்ட்மீ 25உ யுடன் பூர்த்தியாகிறது.

ஜாதகர் நான்காவதான சனி திசையைக் கடந்து விட்டார். திசை வரிசையில் மாரகத்திற்குரிய சனி ஆதிபத்ய ரீதியாக தர்ம-கர்மனய் சசி கூட்டில் சுபர் மனையில் வதிந்து-வர்க்கோத்தம வலுவுடன் இருந்தமையால், ஜாதக மாரகம் நிகழ்த்துவதற்கு ஏதுவில்லை. எனினும், அதற்குரிய நிலைகளைப் பல அம்சங்களிலும் அத்திசையின் பிற்பகுதியில் சரியாய்த் தந்து, பரிசுத்தம் நிறைந்த நேர்மைகளுக் குரியதாக ஆக்கியிருக்கிறது.

இப்பொழுது நிகழும் திசாதிபன் புதன், தன-பஞ்சமங்களுக்கு உடையவன். கடந்த காலத்தில் நிறைவேறுவதற் கின்றியிருந்த பலவும் விசேஷ செல்வாக்குகளுடன் இந்தத் திசையில் நிகழும். இதன் சரியான ஆரம்பத்தைத் தனதபகாரத்தின் மேல் காணலாம். ஜாதக பலன்களை ஆளும் கிரகமான நெப்டியூன் சாயன ரீதியாக துலா ராசிக்குப் பிரவேசிக்கும் பொழுது முதல் நற்பலன் உண்டாகும்.

அறுபது ஆண்டு நாளது சுபானு வருஷம் ஆவணித்திங்கள் 12-ம் நாளுடன் பூர்த்தியாகிறது. இவ் அறுபது ஆண்டு நிறைவைக் கொண்டாட மணிவிழா நிகழ்த்துகின்றனர். அறிஞருக்கு இது ஏற்புடைத்தே. ஆனல், அத்துடன் மக்கள் கடமை நின்றுவிட வில்லை. அறிஞரின் அருள் கனிந்த உள்ளத்து உருவாயிருக்கும் 'ஸமரஸ ஸன்மார்க்கம்' உலகுய்ய எங்கும் நிலவ வேண்டும். ஜை தர்மம் எழுக!

# தாமதமேன்?

("வீரசக்தி")



"பாஷைப்பற்றே தேசப்பற்றுக்கு அடிப்படை" என்று எல்லோருந்தான் பறைசாற்றுகின்றனர். நானுந்தான் சொல்லுகிறேன். ஆனால் நடை முறையிலே காணோம். தமிழ் நாட்டில் தேசாபிமானிகள் இருக்கின்றனர். அவர்கள் பெரும்பாலும் ஆங்கிலப் பித்தர்கள். தமிழ் அபிமானிகள் சிலர் இருப்பினும், தமிழில் வல்லுநரில்லை. அதேபோல் தமிழ்க் கலைஞர்கள் பலர் உளர். தமிழுக்காக மிகுந்த சேவை செய்கின்றனர். ஆனால் அவர்கள் தேசத்திற்கென்று சேவை செய்ய முன்வரவில்லை. இவற்றையே நேரில் காணுகிறோம்.

தென்னாட்டில் பாஷாபிமானமும் தேசாபிமானமும் குற்றமற ஒருங்கே பொருந்திய ஒருவர் உளரென்றால் அவர் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரே என்பதில் சந்தேகமேயில்லை. அவர்கள் தமிழுக்காகவும் பாடு பட்டார்கள்.—இனியும் தன் வாழ்நாள் முழுவதையும் தமிழுக்காகவே அர்ப்பணம் செய்யத் தயாராயிருக்கிறார்கள். அதுபோல தேசத்திற்காகவும் பாடு பட்டார்கள். இந்தியத்தாயின் தனிப்புதல்வன் என்ற பெருமை பெற்றார்கள்.

தேசாபிமானிகளிலும் தொழிலாளர்களுக்கென்றே உழைப்பவர் மிகச் சிலர். தொழிலாளர்களிடையே கூடி, உழன்று, இன்ப துன்பங்களைப் பகிர்ந்து, அவர்களில் ஒருவராக நின்று போரிடுபவர்கள் அதனிலும் குறைவு. திரு. வி. க. இக்கூட்டத்தைச் சேர்ந்த புரட்சிவீரர். அதனாலேயே அவர் என்முன் இளைஞராகவே காட்சியளிக்கிறார். இன்றும் இளைஞரிடையே குலவித்திரியவே அவர் பெரிதும் விரும்புகிறார். அவரின் சக்தி வளர்பிறை போன்றது. வயது ஆக ஆக சக்தியும் வளர்கிறது. இயற்கையின் நியதிக்கு அவர் ஒரு விலக்கு.

எழுதும்போது சக்திவாய்ந்த தமிழை உபயோகிப்பது அவ்வளவு சிரமமன்று. அதைப் பேச்சிலும் திறம்படக் காட்டுவது முடியாத காரியம். "திரு. வி. க. இதை எழுதினாரா பேசினாரா?" என்று நாம் பேதம் காண முடியாது. அவ்வளவு வன்மையாக செந்தமிழைப் புரியும்படி பேசுவார். இந்த சக்தியை வேறொருவரிடம் காண்பது அரிது. அதிலும் இவர் ஒரு விலக்கு.

இவரின் திறமைக்கும், சேவைக்கும் தமிழ் நாட்டின் தனிப் பெருந் தலைவராகத் திகழ வேண்டியவர். ஆனால் பதவி வேட்டையாட விரும்பாத ஆடம்பரமற்ற உள்ளமும், தேசியக் கட்சியிலும் ஒரு கூட்டத்தார் செய்த சூழ்ச்சியும் அதைத் தடுத்தன. திரு. வி. க. மறைமுகமாகவே உழைக்க விரும்பினர். அதனாலேயே கஷியி

லுள்ள சூழல்களைக் கண்டு விலகி நின்று சேவை புரிகின்றார். அது அவரின் பெருந்தன்மையையே காட்டுகிறது. அதனால் தமிழர்களின் உள்ளந்தரங்கத்திலே தலைவராக மலருகிறார்—சோபிக்கிறார்.

வங்காளத்திலே உதித்திருந்தால் இவரை உலகமே வியந்திருக்கும். நோபல் பரிசு இவரை நோக்கியிருக்கும். இக்குற்றம் தமிழர்களாகிய நம்முடைய குற்றமாகும். பல வருடங்களாக இதைச் செய்து வருகிறோம். வங்காளத்திலே இராமகிருஷ்ண பரமஹம்சர் பிறந்தார். அதே காலத்தில் தமிழ் நாட்டில் இராமலிங்க சுவாமிகள் உதித்தார். இராமகிருஷ்ணர் சொன்ன விஷயங்களை இராமலிங்க சுவாமிகளிடம் கவிதையாகக் கண்டோம். ஆனால், பரமஹம்சருக்கு விவேகாநந்தர் தோன்றினார். உலகமே பரமஹம்ஸரின் பெயரை உச்சரிக்கிறது. இராமலிங்க சுவாமிகளுக்கு தமிழர்களாகிய நாம் கைம்மாறு செய்ய மறந்தோம்.

அதுபோல் வங்காளத்தில் கவிதாகூர் பிறந்தார். வங்காளிகள் அவரின் கவிதா திறமைக்கு தலைபணிந்து சேவை செய்தனர். நோபல் பரிசு கதறிக் கொண்டு வந்தது. தமிழ் நாட்டில் கவிதாகூரைப்போல் திரு. வி. க. பிறந்தார். அறிஞர்களைப் போற்றும் சக்தியும், அவர்களை விளம்பரப் படுத்தும் திறமையும் நம்மிடையே குறைவு. அதனாலேயே நம் தமிழ் பின்னடைந்து காணப்படுகிறது. "எட்டுத்திக்கும் சென்று கலை கொண்டு தமிழில் சேர்ப்பீர்" என்று பலரும் அலறினர். அதை நாம் செய்ய மறந்திருக்கிறோம். திரு. வி. க. வின் கலைத் திறமையையும் சேவையையும் என்று போற்றப் போகிறோம்? அவற்றின் சக்தியை என்று ஆனந்தித்துக் கொண்டாடப் போகிறோம்? வங்காளி ஒருவன் இவ்வளவு ஒரு பொக்கிஷத்தை—ஒரு அறிஞரைத் தன்னிடத்தே வைத்துக் கொண்டு சும்மா இருப்பானா? இதற்குள் ஆனந்தத் தாண்டவம் புரிந்திருப்பான்—கூத்தாடிக் கொண்டாடி மகிழ்ந்திருப்பான். உலகெங்கும் சென்று ஓலமிட்டிருப்பான். சற்று யோசித்துப் பாருங்கள். நான் கூறுவது சற்று ஆச்சரியமாகவே யிருக்கும். கலையுணர்ச்சியோடு நமது திரு. வி. க. வைச் சிந்திப்பீர்களாயின் நமது குற்றத்தை உணருவீர்கள்.

எதையும் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை நம்மிடையே அதிகமாக உண்டு. ஞானமார்க்கத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இக்குணம் வேண்டியதுதான். ஆடம்பரமற்ற வாழ்க்கையை அதுவே தருகிறது. இயேசுவின் மலைப்பிரசங்கத்தை திரு. வி. க. தன் வாழ்வின் கொள்கையாகக் கொண்டதும் இப்பாரமார்த்திக ஞானத்தின் உணர்ச்சிதான். ஆனால் அதை அளவிற்கு மீறி விட்டுவிடுவதுதான் கூடாது என்கிறேன். உலகில் உள்ளவரை ஆடம்பரமும் வேண்டியதுதான். புகழை விரும்ப வேண்டியதுதான். பதவி வேட்கையும் சிறிது வேண்டத்தான் வேண்டும். இதுவே புரட்சி மனப்பான்மையை அளிக்கும். இந்தக் குணத்தை

# உயரிய பெரியார்

(K. வைத்தியநாதன்)



ஒரு நாட்டில் ஒருவர் ஏதேனும் ஒரு துறையில் புலமை பெற்றதாலோ, வாழ்க்கையில் சீரிய ஒழுக்க முடைத்தலாலோ, தேசாபிமானம் மிக்கமையாலோ அல்லது உயரிய தவப் பணி பூண்டமையாலோ, அன்னவர் பெரியார் எனப் பலராலும் மதிக்கப்படுவர். இது தொன்மை தொட்டு வந்த வளமையாகும்.

இற்றை ஞான்று 60-ம் ஆண்டு பூர்த்தியுறப் பெறும் திருவாளர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் மேற்கண்ட எல்லாப் பண்புகளும் பெற்ற உயரிய-சீரிய-பெரியார் என்றால் அதை யாரே மறுக்க வல்லார்?

## விரிவுரை

ஏறக்குறைய பத்தாண்டுகட்கு முன்னே அவர்கள் திருவையாற்று அரசர் கல்லூரியில் 'மாணவர் கடமை' என்பது பொருளாக ஆற்றிய அரிய பெரிய விரிவுரை இன்னும் என் உள்ளத்தை விட்டகலவில்லை. அப்பால் 1935-ல் சென்னை திருவள்ளுவர் கழகத்தின் தொடக்க விழாவின்போது அவர்கள் மதுர மொழிகளைக் கேட்கும் பேறு எனக்குக் கிடைத்தது.

சிலருடையன போல் அவர்கள் சொற்பொழிவுகள் 'வழ வழ' என்றிருப்பதில்லை. ஆணித்தரமான அழகான அந்தப் பேச்சின் சக்தி அபரிமிதமானது. எடுத்துக்கொண்ட பொருளுக்கேற்ற கருத்துக்களையும் அவற்றை விளக்க வேண்டிய மேற்கோள்களையும் அணி அணியாக அவர்கள் தமது விரிவுரையில் அமைத்துக் காட்டும் நேர்மை மிகச் சீரியதாகும். இடையிடையே மேல் நாட்

---

வங்காளிகளிடையே அதிகமாகக் காணலாம். இதுவே வங்காளத்தை உயர்ஸ்தானத்திலே வைக்கிறது.

நமது பெருந்தவத்தால் திரு. வி. க. வைப் பெற்றோம். ஏன் கைகட்டிச் சும்மா விருக்கிறோம்? ஏன் விட்டுக் கொடுக்க வேண்டும்? அவரின் சஷ்டியப்த பூர்த்தி விழா நமக்கு ஒரு அரிய சந்தர்ப்பத்தை அளிக்கிறது. அதை முழுத்திறமையுடன் உபயோகித்துக் கொள்ளுவோமாக! தமிழ்நாடெங்கும் அவரின் திருநாமம ஒலிக்கட்டும். அவரைப்பற்றிய சொற்பொழிவுகள் நிகழட்டும். அவரின் அரிய நூல்கள் வெளி வரட்டும். "இறைவா, எமது திரு. வி. க. பல்லாண்டு எம்மிடையே இருந்து திகழ அவருக்கு நீண்ட ஆயுளும் அழியாக் கீர்த்தியும் அருள்புரிவாயாக!" என்று பிரார்த்தனைகள் ஒலிக்கட்டும்!

டறிஞர்களது அபிப்பிராயங்களும் கருத்துகளும் 'பொல பொல' வென்று உதிரும். தமது விரிவுரையை முடித்த பின்னர் அதை மக்களுக்கு நினைப்பூட்ட வேண்டி மீண்டுமோர்முறை அதன் சுருக்கத்தை எடுத்துக் கூறத் தயங்கியதில்லை.

அரசியல் மகாநாடுகளில் அவர்கள் தலைமையேற்கச் சென்ற தலங்கள் தோறும், முதன்முதலாக அத்தலத்தின் பெருமைகளையும், சரித்திரக் குறிப்புகளையும் விவரித்தபிறகே தாம் எடுத்துக் கொண்ட பொருளைப்பற்றிப் பேசுவார்கள். அவர்கள் விரிவுரை முடிந்த பின்னர், இளைஞர்களும், ஏனையரும் அவர்களது அறிவுரை கேட்க அவர்களைச் சூழ்ந்து கொள்வர்.

## நூல்கள்

அவர்கள் தமிழ்த் தாய்க்குச் செய்தளித்திருக்கும் பணிகள் அளவற்றன. அவை ஒவ்வொன்றும் ஒரு விலை மதிப்பற்ற மாணிக்கமாகும். மனித வாழ்வைப் பண்படுத்தி அமர வாழ்வாக்க அவர்கள் தம் நூல்கள் வாயிலாகப் பெரிதும் முயன்றிருக்கின்றார்கள். அவை தமிழ்நாடு உள்ளளவும், உலகம் உள்ளளவும் அழியா வரம் பெற்றவையாகும்.

'மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்', பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை நலம்' முதலான நூல்கள் அனைத்தும் தமிழ்நாட்டுச் சிந்தாமணிகளாவன. நூல்கள் தோறும் பல புலவர்களது கவிகளும், நாயன்மார்கள் ஆழ்வார்கள் முதலான பெரியார்களது தோத்திரக் குறிப்புகளும், குறள் மணிகளும் அங்கங்கே எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. ஒவ்வொரு நூலையும் பல அத்தியாயங்களாகவும் ஒவ்வொன்றையும் பல தலைப்புகளுள்ள பகுதிகளாகவும் பாகுபாடு செய்திருப்பது மிகவும் அழகாயிருக்கின்றது. தீந்தமிழ் நடையில் சிறு சிறு சொற்றொடர் அமைந்த வாக்கியங்களில் அவர்கள் வரைந்திருப்பது வெகு நேர்த்தியானது.

இத்தகைய பொதுநல சேவையையே தமது பணியாக்க் [illegible] கலியாணசுந்தர முதலியார் அவர்கள் எல்லாச் [illegible]ப்புக்களுடன் [illegible]னும் பல்லாண்டுகள் வாழ்வும், அவர்கள் தளராது இன்னும் ப[illegible]றைகளிலும் தம் சேவை செய்துவர இன்னருள் சுரக்கவும் எ[illegible]ம் வல்ல இறைவனை இறைஞ்சுகிறேன்.

---

## வாசக நேயர்களுக்கு

[illegible]சென்ற இதழில் குறிப்பிட்டிருந்த வண்ணம் இந்த ஆவணிமாத இதழ் முழுவதுமே தமிழ்நாட்டுப் பேரறிஞர்கள் பலரைக் கொண்டு எழுதுவித்து திரு. வி. க. வைப் பற்றிய கட்டுரைகளை வெளியிட்டு திரு. வி. க. மணிவிழா மலராகச் சமர்ப்பித் திருக்கிறோம்; ஆதலால், 'வார்தா நினைவுகள்' 'தேவதேவி' 'ஜ்யோதிஷ பல ரகஸ்யம்' ஆகிய தொடர் கட்டுரைகள் வெளியிடப் படவில்லை. அடுத்த இதழிலிருந்து, அவை வழக்கம் போல் தொடர்ந்து வெளிவரும்.

—ஆசிரியர்.

## சுபானு ஸு ஆவணிமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க (வ) | பா | க | பா | க |
| 1 | 21 | 38 | 02 | 119 | 50 | 317 | 02 | 33 | 02 | 144 | 49 | 107 | 24 | 147 | 35 | 61 | 12 | 112 | 31 |
| 2 | 21 | 41 | 59 | 120 | 48 | 331 | 41 | 33 | 37 | 145 | 10 | 107 | 37 | 147 | 30 | 61 | 17 | 112 | 27 |
| 3 | 21 | 45 | 55 | 121 | 46 | 346 | 21 | 34 | 12 | 147 | 31 | 107 | 50 | 147 | 25 | 61 | 22 | 112 | 24 |
| 4 | 21 | 49 | 52 | 122 | 44 | 0 | 10 | 34 | 46 | 148 | 48 | 108 | 04 | 147 | 15 | 61 | 27 | 112 | 21 |
| 5 | 21 | 53 | 48 | 123 | 42 | 14 | 00 | 35 | 21 | 150 | 05 | 108 | 18 | 147 | 04 | 61 | 32 | 112 | 18 |
| 6 | 21 | 57 | 45 | 124 | 40 | 26 | 57 | 35 | 55 | 151 | 19 | 108 | 29 | 146 | 49 | 61 | 37 | 112 | 15 |
| 7 | 22 | 01 | 42 | 125 | 38 | 39 | 55 | 36 | 30 | 152 | 33 | 108 | 40 | 146 | 34 | 61 | 42 | 112 | 12 |
| 8 | 22 | 05 | 39 | 126 | 36 | 52 | 12 | 37 | 04 | 153 | 43 | 108 | 54 | 146 | 15 | 61 | 47 | 112 | 09 |
| 9 | 22 | 09 | 35 | 127 | 34 | 64 | 30 | 37 | 38 | 154 | 52 | 109 | 08 | 145 | 55 | 61 | 51 | 112 | 05 |
| 10 | 22 | 13 | 32 | 128 | 32 | 76 | 24 | 38 | 11 | 155 | 57 | 109 | 21 | 145 | 32 | 61 | 55 | 112 | 02 |
| 11 | 22 | 17 | 28 | 129 | 30 | 88 | 19 | 38 | 44 | 157 | 02 | 109 | 34 | 145 | 08 | 62 | 00 | 111 | 59 |
| 12 | 22 | 21 | 25 | 130 | 28 | 100 | 06 | 39 | 17 | 158 | 02 | 109 | 47 | 144 | 40 | 62 | 95 | 111 | 56 |
| 13 | 22 | 25 | 21 | 131 | 26 | 111 | 53 | 39 | 50 | 159 | 09 | 110 | 00 | 144 | 12 | 62 | 09 | 111 | 53 |
| 14 | 22 | 29 | 18 | 132 | 24 | 123 | 45 | 40 | 22 | 159 | 58 | 110 | 13 | 143 | 41 | 62 | 14 | 111 | 49 |
| 15 | 22 | 13 | 14 | 133 | 22 | 135 | 37 | 40 | 54 | 160 | 53 | 110 | 25 | 143 | 09 | 62 | 17 | 111 | 46 |
| 16 | 22 | 17 | 11 | 134 | 20 | 147 | 49 | 41 | 26 | 161 | 42 | 110 | 37 | 142 | 36 | 62 | 21 | 111 | 43 |
| 17 | 22 | 41 | 07 | 135 | 18 | 159 | 51 | 41 | 58 | 162 | 31 | 110 | 50 | 142 | 02 | 62 | 25 | 111 | 40 |
| 18 | 22 | 45 | 04 | 136 | 16 | 172 | 18 | 42 | 29 | 163 | 13 | 110 | 03 | 141 | 26 | 62 | 29 | 111 | 37 |
| 19 | 22 | 49 | 01 | 137 | 14 | 184 | 46 | 43 | 00 | 163 | 55 | 111 | 15 | 140 | 50 | 62 | 33 | 111 | 33 |
| 20 | 22 | 52 | 58 | 138 | 12 | 197 | 42 | 43 | 30 | 164 | 30 | 111 | 28 | 140 | 14 | 62 | 37 | 111 | 30 |
| 21 | 22 | 56 | 54 | 139 | 00 | 210 | 38 | 44 | 00 | 165 | 04 | 111 | 40 | 139 | 37 | 62 | 40 | 111 | 27 |
| 22 | 23 | 00 | 51 | 140 | 08 | 224 | 08 | 44 | 30 | 165 | 30 | 111 | 53 | 139 | 00 | 62 | 44 | 111 | 24 |
| 23 | 23 | 04 | 47 | 141 | 06 | 237 | 39 | 45 | 00 | 165 | 55 | 112 | 05 | 138 | 22 | 62 | 47 | 111 | 21 |
| 24 | 23 | 08 | 44 | 142 | 04 | 251 | 48 | 45 | 29 | 166 | 10 | 112 | 18 | 137 | 46 | 62 | 51 | 111 | 17 |
| 25 | 23 | 12 | 40 | 143 | 01 | 265 | 57 | 45 | 58 | 166 | 25 | 112 | 30 | 137 | 10 | 62 | 54 | 111 | 14 |
| 26 | 23 | 16 | 37 | 143 | 59 | 280 | 40 | 46 | 26 | 166 | 29 | 112 | 42 | 136 | 36 | 62 | 57 | 111 | 11 |
| 27 | 23 | 20 | 33 | 144 | 57 | 295 | 23 | 46 | 55 | 166 | 33 | 112 | 54 | 136 | 02 | 63 | 00 | 111 | 08 |
| | | | | | | | | | | (வ) | | | | | | | | | |
| 28 | 23 | 24 | 30 | 145 | 55 | 310 | 19 | 47 | 24 | 166 | 25 | 113 | 06 | 135 | 30 | 63 | 03 | 111 | 05 |
| 29 | 23 | 28 | 26 | 146 | 53 | 325 | 16 | 47 | 50 | 166 | 16 | 113 | 18 | 134 | 58 | 63 | 06 | 111 | 02 |
| 30 | 23 | 32 | 23 | 147 | 51 | 339 | 54 | 48 | 17 | 165 | 54 | 113 | 30 | 134 | 29 | 63 | 09 | 110 | 59 |
| 31 | 23 | 36 | 20 | 148 | 49 | 354 | 33 | 48 | 44 | 165 | 31 | 113 | 42 | 134 | 00 | 63 | 11 | 110 | 55 |

**ஆகாயக் காட்சி:**—6உ முன் இரவு மணி 12-10க்கு சசிக்கு வடக்கில் பா 3-20ல் குஜ-சந்திர சமாகமம். 8உ முன் இரவு மணி 11-50க்கு சசிக்கு வடக்கில் பா 2-40ல் சனி-சந்திர சமாகமம். 12உ பின் இரவு மணி 1-50க்கு சசிக்கு வடக்கில் பா 1-50ல் குரு-சந்திர சமாகமம்.

**பிரவேசங்கள்:**—4உ பின் இரவு மணி 5-26க்கு புதன் சிம்மமிருந்து கன்னியா ராசிக்குப் பிரவேசிக்கும். 14உ சுக்ரன் மேற்கில் வக்ராஸ்தமனம்; 25உ கிழக்கில் வக்ரோதயம். 22உ பாதுமத்யம்.

* அயனம்சம் பா-22 கலை-56 விகலை 15·7548 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.

† ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சுபானு[illegible] ஆவணிமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1863
பசலி 13[illegible]3, கொல்லமாண்டு 1119, ஹிஜிரா 1362
இங்கிலீஷ் 19[illegible]3ஆ ஆகஸ்ட்மீ—1943ஆ செப்டம்பர்மீ

| தி | தி | வா | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | செவ் | துதி34-17 | சத16-51 | மர60 | விஷ்ணுபதி புண்ய காலம் |
| 2 | 18 | புத | திரு29-23 | பூர13-11 | அ13-11சி | கரிநாள, சுபம் விலக்க |
| 3 | 19 | வியா | சது25-17 | உட்10-27 | சித்60 | கஜ்ஜாலி திருதியை |
| 4 | 20 | வெள் | பஞ்21-38 | ரே8-23 | சி8-23அ | பகுள சதுர்த்தி, கோ பூஜை |
| 5 | 21 | சனி | சஷ்19-09 | அசு7-47 | சித்60 | மருந்து செய்ய |
| 6 | 22 | ஞா | சப்17-56 | ப❊7-45 | ம7-45சி | **கிருத்திகை விரதம்** |
| 7 | 23 | திங் | அ17-27 | கார்9-36 | ம9-36அ | |
| 8 | 24 | செவ் | நவ18-41 | ரோ12-07 | அ12-07சி | |
| 9 | 25 | புத | தச21-07 | மிரு16-17 | சித்60 | |
| 10 | 26 | வியா | ஏ24-33 | திரு20-57 | ம20-57அ | |
| 11 | 27 | வெள் | து29-25 | புன26-24 | சித்60 | |
| 12 | 28 | சனி | திர34-13 | பூச32-56 | சி32-56ம | |
| 13 | 29 | ஞா | சசி39-07 | ஆ39-35 | சி39-35ம | |
| 14 | 30 | திங் | ●43-48 | மக45-36 | ம45-36சி | **அமாவாஸ்யை விரதம்** |
| 15 | 31 | செவ் | பிர48-09 | பூர50-57 | சி50-52அ | பாத்திரபத சுத்தம் |
| 16 | 1 | புத | துதி51-07 | உத்55-48 | அ55-48ம | ஆயுதம் பயில-பயிற்ற |
| 17 | 2 | வியா | திரு53-23 | அ60-00 | சித்60 | சாமோபா கர்மம் |
| 18 | 3 | வெள் | சது54-37 | ,, 0-09 | அ0-09சி | **ஸ்ரீ விநாயக சதுர்த்தி** |
| 19 | 4 | சனி | பஞ்53-56 | சித்2-23 | ம2-23சி | ரிஷி பஞ்சமி |
| 20 | 5 | ஞா | சஷ்52-12 | சு3-07 | சி3-07ம | சஷ்டி விரதம், சூர்ய சஷ்டி |
| 21 | 6 | திங் | சப்49-17 | வி2-58 | ம2-58சி | அமுக்தாபரண சப்தமி |
| 22 | 7 | செவ் | அ45-34 | அனு1-47 | சி1-47 | துர்வாஷ்டமி, ஜ்யேஷ்டபூஜா |
| | | | | கே59-23 | ம59-23அ | ஜ்யேஷ்ட கௌரீ விரதம் |
| 23 | 8 | புத | நவ40-51 | மூல56-27 | ம56-27அ | நந்த நவமி, ஆவணி மூலம் |
| 24 | 9 | வியா | தச35-23 | பூர52-49 | சித்60 | க்ஷீர விரதாரம்பம் |
| 25 | 10 | வெள் | ஏ29-21 | உத்49-13 | சி49-13ம | பரிவர்த்தன ஏகாதசி |
| 26 | 11 | சனி | துவ23-27 | திரு44-58 | சித்60 | சனிபிரதோஷம் |
| 27 | 12 | ஞா | திர17-25 | அ40-47 | ம40-47சி | விவாகாதிகள் |
| 28 | 13 | திங் | சசி11-24 | சத37-12 | சி37-12ம | அனந்த விரதம் |
| 29 | 14 | செவ் | ப○6-03 | பூ33-36 | ம33-36அ | மஹாளயாரம்பம் |
| 30 | 15 | புத | பிர1-09 | உட்35-24 | சி35-24ம | பாத்திரபத பகுளம்-அநுன் |
| | | | துதி56-50 | | | ய சயன விரதம் |
| 31 | 16 | வியா | திரு53-27 | ரே28-17 | சி28-17அ | ப்ருஹத்பூம விரதம் |

1943ஆ செப்டம்பர்மீ

| | | செவ் | சனி |
|---|---|---|---|
| கே | 4-கன்-புத<br>25-வ-புதன்<br>30-வ-சுக்கி | குரு<br>ராகு<br>சூ-பு<br>சுக் | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS.
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

